ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# பெரியதிருமொழி - உ - ம் பத்து - அ - ம் திருமொழி - திரிபுரம் ப்ரவேசம்.

—◦◦❧◦◦—

வ்யா.—(க)†"ஹ்ரீரேஷாஹிமமாதுலா" - ஹ்ரீரேஷாஹிமமாதுலா" என்னவும் மாட்டாதே நிற்கிற விடமிறே †இவ்விடம்; †அவனப்படி யிராநுகில் ஆஶ்ரயணீயனாக†மாட்டானே.

†தான் †யுக்தாயுக்தங்களறியாதே†நிற்பது இருப்பது விழுவது எழுவதாய்க்கொண்டு மோஹித்துக்கொண்டு கிடந்த தசையை யநுஸந்தித்த திருத்தாயார் அவன்படிகளைச் சொல்லிக்கூப்பிடக் கேட்டும், தான்வாய்வெருவியும், அவ்வழியாலே அல்பம் தெளிவு பிறந்தது; அவன் குணங்கள் நெஞ்சிலே ஊற்றிருந்தது. அறிவு கலங்கு மாபத்திலே வந்து உதவும் ஸ்வபாவனென்று அவன்படிகளை யநுஸந்திந்து ஆஶ்வஸ்தையாய், பின்பு திருவட்டபுயகரத்துநாயனை அநுஸந்தித்து அவரையே பாவித்து, அந்த பாவநாப்ரகர்ஷத்தாலே, †ப்ரத்யக்ஷ ஸமாநாகாரமாய் †உருவுவெளிப்பாடு போலேயாய் அவர்க்குச் சிலவார்த்தைகள் தான் சொல்லுகிறாளாகவும், அவர் தூக்குச் சிலமறுமாற்றங்கள் சொல்லுகிறாராகவும் சிலவற்றைச் சொல்ல; இதைக்கேட்ட பந்துவர்க்கமெல்லாம் "நீ ப்ரமித்தா யோ? சொல்லுகிறதென்னென்பது" என்ன; திருவட்ட புயகரத்து நாயனாரை நானிங்ஙனே சிலவார்த்தைகளைக் கேட்டேன், அவரென க்குச் சில மறுமாற்றங்களருளிச் செய்தாரென்று, அவ்வார்த்தை யைத் தாய்மார் தோழிமார்க்குச் சொல்லுகிறாளாய்ச் செல்லுகிறது

அநு.—திரிபுரம் ப்ரவேசம்.—(உ) * திவளும் வெண்மதியிலே நாயகி பட்ட அவஸாதாதிசயத்தைக்கண்டு, ஸர்வேஶ்வரன் திருவட்டபுயகரத்தே முந்துறவே தான் ஆஶ்ரிதார்த்தமாகவிருக்கும் நிலையைக்காட்டக்கண்டு, தலை க்கவனோடேபிறந்த உக்திப்ரத்யுக்திபர்யந்தமான அநுபவத்தை யநுபவிக்கிறா ரென்று ஸங்க்ரஹஸங்கதி கூட்டிக்கொள்வது.

முந்துறவே ஆஶ்ரிதார்த்தமாக இருக்கவேணுமோ, ஆபத்துக்களிலே தோற்றியுதவி, பிற்பாட்டுக்கு "ஹ்ரீரேஷா" என்னுமாபோலே வினவலா காதோவென்ன வருளிச்செய்கிறார் (ஹ்ரீரேஷேத்யாதி). பிற்பாடனுகையு

(க) ரா - ஆர - (உ) உ - எ -

வினவுகையும் அவத்யமென்னும்நினைவாலே அதுசெய்யமாட்டாதே முந்துற வந்துநின்றுனென்று கருத்து. (இவ்விடம்) என்றது-திருவட்டபுயகரம். இப்படி அவன் முற்பாடனுயிருக்கவேண்டியானென்னென்ன வருளிச்செய்கிறுர் (அவனித்யாதி).

கீழ்த்திருமொழியில் மோஹித்துக்கிடந்த பெண்பிள்ளை இத்திருமொழியில் தெளிந்து உக்திப்ரத்யுக்திரூபேண அநுபவிக்கக்கூடுமோவென்னும் சங்கையைப் பரிஹரியாநின்றுகொண்டு விஸ்தரஸங்கதி யருளிச்செய்கிறுர், (தான் யுக்தேத்யாதி). (யுக்தாயுக்தங்கள்) என்றது - ஸ்ரீபூமிப்பிராட்டியிடத்தில் யாமுக்தனுய் இடவெந்தையிலிருக்குமவன் நமக்குமிடங்கொடுப்பனென்றறியிருக்கை யுக்தம். இப்படி தடிக்கை அயுக்தமென்றபடி. யத்வா - கீழ்த்திருமொழியில் மோஹித்துக்கிடந்த பெண்பிள்ளை இத்திருமொழியில் கிடந்து அநுபவிக்கைக்கு ஸங்கதியருளிச்செய்கிறுர் (ஹ்ரீரித்யாதி). "உன்மனத்தால் என்நினைந்திருந்தாய்?" என்று கேட்ட திருத்தாயார்க்கு மறுமாற்றம் சொல்லமாட்டாதே நாணியிருந்து அத்தாலே ஸர்வஸமாஶ்ரயணீயனுய் இடவெந்தை பிரானிருக்க இவளாறியிராதே இப்படிபடுவதே என்று திருத்தாயார் அநுஸந்தித்தாளாய், அவன்படிகள் சொல்லக்கேட்டுத் தெளிவுபிறந்ததென்று கருத்து. (மாட்டானே) என்றவநந்தரம், ஆகையாலே என்று சஷம். அவன்படியிதுவாகையாலே ஆறியிருக்கையுக்தம், இப்படிபடுகை அயுக்தமென்று ஹேதுவாக்கிக்கொள்வது. "இன்புறும் - மயங்கும்" என்று மாஹம்மாத்ரம்சொல்லிற்றேயாகிலும், (க) * சங்குலும்பகலில், (உ) "எழுதுலாமயங்கும்" என்று திருத்தாயார்சொன்ன மயக்கமே யிங்குமாகையால், அங்குச்சொன்ன ஸ்த்திதிகதிசயநாதிகள் இங்கும் விவக்ஷிதமென்று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறுர் (நிற்பதிருப்பது விழுவதெழுவதாய்) என்று. (ப்ரத்யக்ஷஸமாநாகாரமாய்) என்றது - மாநஸப்ரத்யக்ஷஸமாநாகாரமயென்றபடி. (உருவு வெளிப்பாடுபோலேயாய்) என்றது - சாக்ஷுஷப்ரத்யக்ஷம்போலேயுமாயென்றபடி. ... ... ... ... *

மூ.—திரிபுர மூன்றெரித்தானும்
மற்றைமலர்மிசை மேலயனும்வியப்ப
முரிதிரை மா கடல்போல் முழங்கி
மூவுலகும் முறையால் வணங்க
எரியன கேசரிவாளெயிற்றே
டிரணியனுக மிரண்டுகூறு
அரியுருவா மிவரார்கொலென்ன
வட்டபுயகரத்தே னென்றுரே. (க)

(க) தி-வாய்-எ-உ- (உ) தி-வாய்-எ-உ-ச.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| திரி | (ஆகாசத்திலே)ஸஞ்சரிக்கிற [யும் | முறையால் | ப்ராப்தமானபடியே |
| மூன்றுபுரம் | மூன்றுபடைவீட்டை | வணங்க | காலிலேவிழவும் |
| எரித்தானும் | தஹித்தருத்ரனும் | இரணியன் | ஹிரண்யனுடைய |
| மற்றை | இன்னும் | ஆகம் | சரீரமானது [யா |
| மேல் | விலக்ஷணனாய் | இரண்டுகூறு | இரண்டுகூறும்ப |
| மலர்மிசைஅயனும் | திருநாபிகமலத்திற் பிறந்த ப்ரஹ்மாவும் | எரிஅ(ன்)ன | நெருப்புப்போன்ற |
| வியப்ப | விஸ்மயப்படவும் | கேசரி | உளைமயிரையும் |
| முரி | உலாவாநின்றுள்ள | வாள் | ஒளியையுடைத்தான |
| திரை | அலைகளையுடைய | எயிற்றோடு | எயிற்றையுமுடைய |
| மா | பெரிய | அரியுருவாம் | நரஸிஹ்மருபியான |
| கடல்போல் | கடல்போலே | இவர்ஆர் கொல்? என்ன | இவரார்? என்று கேட்க |
| முழங்கி | இரைத்துக்கொண்டு | அட்டபுயகரத்தேன் | நான் திருவட்டபுயகரத்துநாயனூர் |
| மூவுலகும் | மூன்றுலோகத்திலுள்ளாரும் | என்றார் | என்றருளிச்செய்தார் |

வ்யா.—முதற்பாட்டு. (திரிபுரமித்யாதி) †அவர்வந்து †தோற்றினபோதிருந்தபடி.

† (திரிபுரமூன்றெரித்தானும்) திரிபுரம் - ஸஞ்சரிக்கிறபுரம் அதாவது - ஆகாசத்திலே † ஸஞ்சரிப்பனவுமாய், ஒரோவிடங்களிலே போயிருந்தவாறே கீழ்ப்பட்டதடைய நசிக்கக்கடவதாயிருப்பது மூன்று படைவீடுண்டிறே; அப்படியாகவுமாம். அன்றிக்கே த்ரிபுரம் என்று (க) † "பஞ்சபஞ்சஜநாঃ - பஞ்சபஞ்சஜநாঃ" (உ) †"ஸப்தஸப்தர்ஷயঃ - ஸப்தஸப்தர்ஷயঃ" என்று தனித்தனியே நாமதேயமாகவுமாம். த்ரிபுரதஹநத்தாலே ஸஞ்ஜாத வீரனான ருத்ரனும் (மற்றையித்யாதி)†ஸம்ஹாரத்துக்கு இவன் கடவனானால்தான் †ஸ்ருஷ்டிக்கக் கடவனாய், †இவனுக்கும் ஜநகனாய், திருநாபீகமலத்திலே அவ்யவதாநேநபிறந்து இதர விஸஜாதீயமான ஜந்மத்தையுடையனாகையாலே அஜனென்று சொல்லப்படுகிற ப்ரஹ்மாவும். (வியப்ப) †தாந்தாம் சில அத்புதகர்மங்களைப் பண்ணிப் பிறர் விஸ்மயப்படவிருக்கிற தாங்கள், கொக்குக்கடலைக் கண்டாற்போலே விஸ்மயப்பட.

(முரியித்யாதி) ப்ரஹ்மாதிகளை யொழிந்தாரடைய, - உலாவாநின்றுள்ள திரைகளையுடைய பெருங்கடல்போலே கோஷித்துக்கொண்டு. (மூவுலகும் - வணங்க) "மஞ்சாঃக்ரோ - மஞ்சாঃக்ரோ

(க) ப்ருஹதா (உ)

ந்தி" போலே. (முறையால்) ஹிரண்யனுடைய அநீதியாலே முறை கெட்டு அவன்காலிலே விழுந்து திரிந்தவர்கள், அவன் பட்டுப் பாகையாலே †அவன் சேஷியான ஸ்வபாவத்திலே வணங்கவென் வுதல்; பர்யாயேண வென்னுதல்.

(எரியித்யாதி) அக்நிகல்பமான உளைமயிரையும், ஒளியை டைத்தான எயிற்றையு முடையனாய், †சிலபதார்த்தங்களினுடைய தாற்றரவிலே ஸஹஜசாத்ரவத்தாலே முடிந்துபோம் பதார்த்தங் ள்போலே, ஹிரண்யனுடைய சரீரமானது இரண்டு கூறும்படி ான நரஸிம்ஹமான. (இவரார்கொலென்ன) ஒரு சிறுக்கனுக்குத் மப்பன்பகையாக, அவனிலும் அண்ணியனாய் உதவி நோக்கினவ னப்போலே யிராநின்றார்; இவரார்தானென்கிறாள். †அடையாளம் சால்லாநிற்கச்செய்தே நிஶ்சயிக்கவொண்ணாதபடியிறே விஷயஸ்வ ாவம். (அட்டபுயகரத்தேனென்றாரே) † ஒரு சிறுக்கனுக்காகவந் தவின அவ்வளவோ? உனக்கு உதவுகைக்காக இங்கேவந்து அவ ரப்ரதீக்ஷனாய் வந்து நிற்கிறவனன்றோ? நானென்கிறார். ... (க)

அரு—முதற்பாட்டு. (திரிபுரமித்யாதி) இவளுக்கு அரியுருவாயவன் தாற்றினதுவும், அப்போது ப்ரஹ்மாதிகள் கொண்டாடினதுவுமோ இங் ச்சொல்லுகிறதென்ன வருளிச்செய்கிறார் (அவர்வந்தித்யாதி). (தோற்றின பாது) என்றது - தூணிலேவந்துதோன்றினபோதென்றபடி.

மேலே த்ரிபுரதஹநத்தாலே என்று வாக்யார்த்தமருளிச்செய்வதாக ரதீகம் (திரிபுரமூன்றெரித்தானும்) என்றது. "திரிபுரம்" என்றும் "மூன்று" ன்றும் புநருக்தமன்றோவென்னும் சங்கையிலே, இரண்டுவிதமாக வருளிச் சய்கிறார் (ஸஞ்சரிக்கிறவித்யாதி). த்ரிபுரமென்று - திரிபுரமென்றுசொன் து. (பஞ்சபஞ்சஜநா:) என்றது, "యస్మిన్పఞ్చపఞ్చజనాః ఆకాశశ్చప్రతిష్ఠితః - ஸ்மிந்பஞ்ச பஞ்சஜநா ஆகாஶஶ்சப்ரதிஷ்டித:" என்ற வாஜஸநேயிசாகா ாக்யத்திலோதப்பட்டது. பஞ்சஜநசப்தம், (க)"ప్రాణస్యప్రాణః ఉతచక్షుషశ్చ ః శ్రోత్రస్యశ్రోత్రమన్నస్యాన్నం మనసోమనోయే విదుః - ப்ராணஸ்யப்ராண தசக்ஷுஷஶ்சக்ஷு: | ஶ்ரோத்ரஸ்யஶ்ரோத்ரம் அந்நஸ்யாந்நம் மநஸோ ந்வியேவிது:" என்ற வாக்யசேஷத்திற்சொல்லப்பட்ட ப்ராணசக்ஷுஶ்ஶ் ராத்ராந்நமநஸ்ஸுக்கள் அஞ்சுக்கும்பேராக ஸ்ரீபாஷ்யத்தில் நிர்வஹிக்கப் ட்டது. (ஸப்தர்ஷய: என்று) "ஸப்தர்ஷய:" என்றாற்போலே. "மற்றை - மல் மலர்மிசை அயனும்" என்று அந்வயம் திருவுள்ளம்பற்றி வாக்யார்த்த ருளிச்செய்கிறார் (ஸம்ஹாரத்துக்கித்யாதி). "மற்றை" விலக்ஷணனென்று

(க) ப்ருஹ தார-

சப்தார்த்தமாய், அதுதானும் ருத்ரனுக்கில்லாத வைலக்ஷண்யமென்கிறு
ஸ்ருஷ்டிக்கக்கடவனுய்) என்று. "மேல்" என்று - மேலான அஜனென்று
அத்தையருளிச்செய்கிறூர் (இவனுக்கும் ஜநகனுய்) என்று. சிவனும் பிரமனு
வியப்ப என்னுதே, அவர்களுக்கு விசேஷணமிட்டுக்கொண்டு "வியப்ப
என்றதுக்குக் கருத்தருளிச்செய்கிறூர் (தாந்தாமித்யாதி).

"முரி" என்றதினர்த்தம் (உலாவாநின்றுள்ள) என்றது. (அவன்சேஷ
யான) என்றது - ஸர்வேஸ்வரன் சேஷியானவென்றபடி.

ஸிம்ஹத்தைக்கனுவிலேகண்ட ஆனை முடியுமாபோலேயென்று திருவு
ளம்பற்றி யருளிச்செய்கிறூர் (சிலபதார்த்தங்களித்யாதி). "ஆர்கொல்" என்
ஸம்சயிக்கிறுளாகையன்றிக்கே, ஈடுபடுகிறுளாக வ்யாக்யாநம்செய்ததுக்
நியாமகமருளிச்செய்கிறூர் (அடையாளமித்யாதி). இயத்தயா நிஶ்சயிக்
வொண்ணுதபடியான ஸ்வபாவத்தை யநுஸந்தித்து ஈடுபட்டு, "ஆர்கொல்?"
என்கிறுளென்று கருத்து. சிறுக்கனுக்குதவினமையிலே ஈடுபட்டிருக்
மிவள் தனக்குச் சடக்கென உதவினமைசொல்லாதே, "இவர்" என்று படர்
கையாகச்சொன்னதுக்கு ப்ரத்யுத்தரமாகத் தாத்பர்யமருளிச்செய்கிறூர் (ஒ
சிறுக்கனுக்கித்யாதி). ... ... ... ... ... (க

மூ—வெந்திறல் வீரரில் வீரரொப்பார்
வேதமுரைத் திமையோர் வணங்கும்
செந்தமிழ் பாடுவார்தாம் வணங்கும்
தேவரிவர் கொல் தெரிக்க மாட்டேன்
வந்து குறளுருவாய் நிமிர்ந்து
மாவலி வேள்வியில் மண்ணளந்த
அந்தணர்போன் றிவரார்கொ லென்ன
வட்டபுயகரத்தே னென்றுரே. (உ

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இமையோர் | ப்ரஹ்மாதிகள் | வீரர்ஒப்பார் | ஆண்பிள்ளைத்தன |
| வேதம் உரைத்து | வேதாத்யயநம்பண்ணிக்கொண்டுவந்து | | தையுடைய சக் வர்த்தித் திருமக ரைப்போலே பே ன்மையையுடைய ராய் |
| வணங்கும் | ஆஶ்ரயிக்குமவராய் | | |
| வெம்திறல் | வெவ்வியமிடுக்கையுடைய | செம்தமிழ் | அழகியதமிழை [எ |
| வீரரில் | சூரர்கள் ஈடுபடும்படியான | பாடுவார்தாம் வணங்கும் | பாடும்முதலாழ்வார் ஆஶ்ரயிக்கிற |

| | | | |
|---|---|---|---|
| 'தவர் | திருவேங்கடமுடையானைப்போலே சீலத்தையுடையராயிராநின்றார்; | குறளுருவாய் வந்து | வாமநவேஷத்தைக் கொண்டுவந்து (திருக்கையில்சீர்விழுந்தவாறே) |
| )வர்கொல் | இவர்இன்னாரென்று | நிமிர்ந்து | வளர்ந்து |
| தரிக்கமாட்டேன் | அறிகிலேன்; | மண் | பூமியை |
| | | அளந்த | அளந்துகொண்ட |
| ரவலி | மஹாபலியின் | அந்தணர்போன்ற | ப்ரஹ்மசாரியைப்போலேயுமிராநிற்கிற |
| வள்வியில் | யஜ்ஞவாடத்திலே | இவர்ஆர்கொல்? என்ன அட்டபுயகரத்தேன் என்றார். (உ) | |

வ்யா—இரண்டாம்பாட்டு. (வெந்திறலித்யாதி) வெவ்வியதிற ண்டு- பராபிபவநஸாமர்த்யம்; அத்தையுடையரானவீரர்கள் தாங் ள் †மடலெடுக்கும்படியான ஆண்பிள்ளைத்தனமுடையவர் - சக்ர ர்த்தித்திருமகனார். (க) [ஶத்ரோ:-சத்ரோ:] †கெடுவாய்! என்னுடைய க்ருவை ஆரென்று நினைத்துத் தேரை மீட்டுக்கொடு போந்தாய். ப்ரக்யாதவீர்யஸ்ய - ப்ரக்யாதவீர்யஸ்ய]†எதிரிகளான நம் படைவீட்டி ும் ப்ரஸித்தமாயன்றோ அவருடைய ஆண்பிள்ளைத்தன மிருப்பது, கேட்டறியாயோ? அது ஏறிப்பாயாத மேடில்லைகாண். [ரஞ்ஜநீயஸ்ய விக்ரமை:- ரஞ்ஜநீயஸ்யவிக்ரமை:] கண்டுபராக்ரமிக்க வொண்ணாத ு அளவற எதிரி†முடிகினல் அது நிலமாக்கிக்கொண்டு பராக்ரமிக் ்படியைப் பார்த்தால், காந்தனைவிரும்புமாபோலே எதிரிகளுக்கு ரும்பவேண்டும் படிகாண் அவராண்பிள்ளைத் தனமிருப்பது. (வே ித்யாதி) †ராவணவதஸமநந்தரம்ப்ரஹ்மாதிகள் நாராயணனுவாக த்தமான பதங்களைக்கொண்டு ஸ்தோத்ரம் பண்ணும். (வெந்தி ல் வீரரில் வீரரொப்பார்) இது மேன்மை யிருக்கும்படி.

(செந்தமிழித்யாதி) சீலத்தைப்பார்த்தால் அநுகூலரா யிருப் ரெல்லாரும் ஏத்தும்படியிருப்பர். (உ)† "பெருகுமதவேழம்" ன்கிறபடியே கலப்பற்ற பசுந்தமிழ்பாடும் முதலாழ்வார்கள். அவர் ருக் காஶ்ரயணீயனான திருவேங்கடமுடையானைப் போலேயுமிரா ன்றார். (தெரிக்கமாட்டேன்) வீரத்தைப் பார்த்தவாறே சத்ருக்களு மத்தும்படியா யிருந்தது, மேன்மையைப் பார்த்தவாறே ப்ரஹ்மா களுமேத்தும்படியா யிருந்தது, சீலத்தைப் பார்த்தவாறே அநுகூ ரடைய ஏத்தும்படியாயிருந்தது. இவரை இன்னாரென்று நிஶ்ச

(க) ரா-யு-கOகூ-கூ. (க) உ-திரு-எ௫.

யிக்கப்போகிறதில்லையீ. ஆக, மேன்மையும் தரைகாண வொண்ணா தாயிருந்தது. சீலமும் தரைகாணலாயிருந்ததில்லை.

(வந்தித்யாதி) மஹாபலி யஜ்ஞ வாடத்திலே வாமநவேஷத்தை க்கொண்டுவந்து திருக்கையிலே நீர்விழுந்தவாறே வளர்ந்து பூமியை அளந்துகொண்ட இந்த வேஷத்தையுடைய †ஶ்ரீவாமநனைப்போலே யுமிராநின்றார். † சுக்ராதிகள், "ஈஶ்வரன்கிடாய், உன்னைவஞ்சிக்க வருகிறான்" என்னச்செய்தேயும் "விநீதவேஷத்தைக்கண்டுவைத்து எங்ஙனே கொடாதொழியும்படி" என்றானிறே. (இவரார்கொலெ ன்ன வட்டபுயகரத்தே னென்றாரே) கழஞ்சுமண்ணிரந்துவந்தவ ல்லேன், உன்னையிரந்து வந்தவன்நானென்கிறார். பிறர்க்காக இரந் வனல்லேன், எனக்காக இரந்தவனென்கிறார். ... (உ

அரு.—இரண்டாம்பாட்டு. (வெந்திறலித்யாதி) கீழ்ப்பாட்டிலே, ஒ சிறுக்கனுக்காக வந்திரென்றதுக்கு ப்ரத்யுத்தரமாக, "உனக்குதவவேணு என்றவஸரப்ரதீக்ஷனுயிருக்கிறேன்" என்னச்செய்தேயும், மெய்க்கொள்ள தே அவருடைய மேன்மையையும் ஸௌசீல்யத்தையுங்கண்டு ஈடுபடாநின் கொண்டு, "நீர் பிறர்க்காக மண்ணாசையாலே வந்தீரித்தனை" என்ன, நா எனக்காகப் பெண்ணாசையாலே வந்தேனென்கிறாரென்று ஸங்கதி.

(மடலெடுக்கும்படியான) ஈடுபடும்படியான். ஶ்லோகத்துக்குத் தெ குத்த தாத்பர்யம் (கெடுவாயித்யாதி). நம்மாலே ஜயிக்கத்தக்கவனென்று நாலுபேர்க்கும், "ஜயித்துவந்தான்" என்று தோற்றும்படியோ நீமீட்டுக்கொ ண்டுவந்தாயென்று தாத்பர்யம். ப்ரோபஸர்க்கார்த்தம் (எதிரிகளித்யாதி (முடுகினல்) மேலிட்டால், (க) "భవాన్నారాయణో దేవః - பவாந்நாராயணோ தேவஃ" என்றத்தையுட்கொண்டு தாத்பர்யமருளிச்செய்கிறார் (ராவணே யாதி). "வேதம்" இத்யாதி - தேவர்க்கு விசேஷணமாக ஸ்வரஸமாக அந் யிக்கச்செய்தேயும், வீரர்க்கு விசேஷணமாக இங்ஙனந்வயித்தது, (உ) "ஈச வானவர்க்கென்பனென்றால் அதுதேசமோ திருவேங்கடத்தானுக்கு" என் தேஜஸ்கரமாகாமையாலேயென்று கண்டுகொள்வது.

(ந) "இருந்தமிழ்நன்மாலையிணையடிக்கே சொன்னேன் பெருந்தமி னல்லேன் பெரிது" என்று சொன்னபாசுரத்தை "செந்தமிழ்பாடுவார் என்றதுக்கு ப்ரமாணமாக எடுக்கவேண்டியிருக்க, "பெருகுமதவேழம் என்று மேல்பாட்டையெடுத்தது-எம்பெருமான், "ஆழ்வீர்,! நீர்பெருந்தமி னல்லேன் என்றீர், வல்லீராகில் ஒருகவிசொல்லிக்காணும்" என்ன; அவரு

(க) ரா - யு -கக௯-கரு. (ந) உ - திரு - எச.
(உ) தி-வாய் - ரு - ரு - ச.

நக்கும்படி இப்பாட்டைப்பாடி, மேல் நெஞ்சைப்பார்த்து, ஸ்வாநுபவம் பண்ணினாராகையாலே அவனுகந்தபாட்டே ப்ரமாணமாகவேணுமென்று திருவுள்ளம்பற்றியருளிச்செய்கிறார் (டருகித்யாதி).

(ஸ்ரீவாமநனைப்போலேயும்) என்கையாலே-மேன்மையும் சீலமும் தரைணுதிருந்தாலும் அர்யார்த்தமாய் வந்தவரைப்போலேயிருக்கிறதென்கை சூசிதம். "போன்று" என்றது - போன்றவரென்று விவக்ஷித்து, அத்தால் லித்தவிநீதவேஷத்தை யருளிச்செய்ததுக்கு ப்ரசுரதோபயோகம்காட்டுகிறார் (சுக்ராதிகளித்யாதி). வேதாத்யயநாதிவிநீத வேஷத்தைக்காட்டி மாவலியை வாய்மாளப்பண்ணினனென்று கருத்து. ... ... ... (உ)

மூ.—செம்பொனிலங்கு வலங்கை வாளி
  திண்சிலை தண்டொடு சங்கமொள்வாள்
உம்பரிருசுட ராழியோடு
  கேடகமொண்மலர் பற்றியெற்றே
வெம்புசினத்தடல் வேழம்வீழ
  வெண்மருப்பொன்று பறித்திருண்ட
அம்புதம்போன்றிவரார்கொலென்ன
  வட்டபுயகர்த்தேனென்றாரே. (ங)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வலங்கை | வலத்திருக்கையில் | ஒள் | அழகிய |
| இலங்கு | ப்ரகாசியாநின்றுள்ள | மலர் | புஷ்பத்தையும் |
| செம்பொன் | பசும்பொன்னால் செய்யப்பட்ட | பற்றி | தரித்துக்கொண்டு |
| | | எற்றே! | என்னே! |
| வாளி | பாணங்களையும் | வெம்புசினம் | மிக்ககோபத்தையும் |
| திண் | த்ருடமான | அடல் | மிடுக்கையுமுடைய |
| சிலை | வில்லையும் | வேழம் | குவலயாபீடமென்னும்யானை |
| தண்டொடு | கதையையும் [யும் | | |
| சங்கம் | ஸ்ரீபாஞ்சஜந்யத்தை | வீழ | முடியும்படி |
| ஒள் | விளங்காநின்றுள்ள | வெள்மருப்பு ஒன்று | வெளுத்ததந்தமொன்றினை |
| வாள் | திருக்குற்றுடைவாளையும் | | |
| | | பறித்து | முறித்து |
| உம்பர் | (ஆயுதங்களுக்கெல்லாம்) மேலாய் [ய | இருண்ட | ஜலஸம்ருத்தியாலே கறுத்திருந்துள்ள |
| இருசுடர் | மிக்ககாந்தியையுடை | அம்புதம்போன்ற | மேகம்போலேயிருக்கிற |
| ஆழியொடு | திருவாழியாழ்வானையும் | இவர் ஆர்கொல்என்ன; அட்டபுயகரத்தேனென்றார். | |
| கேடகம் | கடகையும் | | (ங) |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (செம்பொனித்யாதி) †எதிரிகள்மேலே எத்தெழும்போதைக்கும் அபலைகளை வசீகரிக்கைக்கும் இவை

யிரண்டுக்கும் பரிகரமாயிற்று திவ்யாயுதங்கள். (செம்பொனிலங்கு வலங்கைவாளி) (க) †[[illegible] - தீப்தபாவகஸங்காசை:] கையிலிருக்கும்போது இருக்குமாபோலன்றுகிடாய் விட்டாலிருக்கும்படி; எரித்துக்கொண்டாயிற்று வருவது. [[illegible] - சிதை:] அல்லாத அம்புகளோபாதியாக நினைத்திராதே, பட்டால் எரித்தல்லொறுக்கவொண்ணாதபடியாய்க்கிடாயிருப்பது. [[illegible] - காஞ்சநபூஷணை:] அநுகூலரான என்போல்வாரையும் தோற்பிக்குந்துறையுண்டுகிடாய். [[illegible] - நத்வாமிச்சாம்யஹம் த்ரஷ்டும்] † ஸௌப்ராத்ரம் பின்னாட்டுகையாலே சொல்லுகிறேன். [[illegible] - ராமேணநிஹதம்சரை:] † புக்குமுடிகைக்கும் விடாய் தீருகைக்குமுடலாயிருக்குமிறே மடு; அதுபோலேயிருக்கிற அவ்வழகை அநுபவிக்குமதொழிய அவ்வம்புக்கிலக்காய் நீமுடிந்துபோக † நானிச்சிக்கிறிலேன்.

(செம்பொனித்யாதி) †வெறும்புறத்திலே ஆகர்ஷகமாயாயிற்று திருக்கைதானிருப்பது; அதுக்குமேலே பொற்பகழியையுடைய அம்புகளையுமுடைத்தாயாயிற்றிருப்பது. †ஸ்வத:ஸ்ப்ருஹணீயமுமாய் † பிடியாலு மாகர்ஷகமாயாயிற்று அம்புகள்தானிருப்பது. (திண்சிலை) எதிரிகள்மேலே †நாலிரண்டுபெண்ணை வலித்தாலும் §மெல்காத வில். (தண்டு) அப்படியிருக்கிறதண்டு. (சங்கம்) (ஒள்வாள்) பிடித்த பிடியாலே அழகிதாயிருக்கிறவாள். (உம்பரித்யாதி) ஆயுதங்களுக்கெல்லாம் ப்ரதாநமாயிருக்கையாலே மிக்கபுகரையுடைத்தாயிருக்கிற திருவாழியோடே. (கேடகம்) ‡கடகு. (ஒண்மலர்) காமனைப்போலே அபலைகளையழிக்கைக்கு உபகரணமானமலர். (எற்றே) என்னே!

(வெம்பித்யாதி) மிக்கசினத்தையுடைத்தாய் யுத்தோந்முகமாயிருக்கிற குவலயாபீடத்தை முடியும்படியாக, நிறத்துக்குப் பரபாகமான வெண்மையையுடைய கொம்பைப்பறித்து, இருண்டமேகம்போலே யிருக்கிற இவரார்தானென்ன; மேல்வார்த்தை (அட்டபுயகரத்தேன்) கம்ஸப்ரேரிதமான குவலயாபீடத்தை நிரஸித்து கம்ஸன்படைவீட்டில் பெண்கள் பயத்தைப்போக்கின அவ்வளவேயல்ல, உன்பயம் தீர்க்கைக்காகவந்து நிற்கிறவன்நானென்கிறார் (௩)

(க) ரா-யு-௧௬-௨௨. § மெல்காத-இளகாத. ‡ கடகு-ரக்ஷகம்.

அரு.—மூன்றும்பாட்டு. (செம்பொனித்யாதி). கீழ்ப்பாட்டில், எனக்
காக நான்பெண்பித்தனாய்வந்தேன், பிறர்க்காக மண்ணாசையால் வந்தேனல்
லேன் என்றானிறே; அத்தை அங்கீகரித்து, "நீர் உமக்காகப் பெண்ணாசையா
லேவந்தீராகிலும், ஸ்ரீமதுரையில் பெண்களிடத்தில் பித்தனாய் அவர்களுக்கு
அச்சம் தீர்க்கவும் வசீகரிக்கைக்கும் பரிகரமான திவ்யாயுதச்சேர்த்தியோடு
வந்தீராகவேணும்" என்ன, அங்ஙனன்று, உன்பயம் தீர்க்கவந்தேனென்கிறா
ரென்று ஸங்கதி.

இப்போது திவ்யாயுதங்களைச் சொன்னதுக்குத் தாத்பர்யமருளிச்செய்
கிறார் (எதிரிகளித்யாதி). திருச்சரங்கள் ப்ரதிகூலரை வெல்லுகைக்கும் அநு
கூலரை வசீகரிக்கைக்கு முடலாயிருக்குமோவென்ன (தீப்தபாவகேத்யாதி).
...ஸ்ய - த்வாம் - ப்ராதாவானவுன்னை" என்றதின்கருத்தருளிச்செய்கிறார்
(ஸௌப்ராத்ரமித்யாதி). இவன் துர்வ்ருத்தனாகையாலே ஸௌப்ராத்ரம்
நமக்கற்றதென்று கருத்து. ராகவேண என்னாதே, "ராமேண" என்று
அவர் ஸௌந்தர்யம்சேர்ன்னதுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (புக்கித்யாதி).
நான்) என்றது - ஸ்ரீவிபீஷணாழ்வானை. திருச்சரங்கள்போலே மற்றை
ஆயுதங்களும் இங்ஙனிருக்குமென்று திருவுள்ளம்.

இலங்கு வலங்கையில் செம்பொனுடைத்தான வாளியென்று சப்தார்த்
தமாயருளிச்செய்கிறார் (வெறும்புறத்திலேயித்யாதி வாக்யத்வயத்தாலே).
செம்பொன்போலேயுமாய், இலங்காநின்றுள்ள வாளியென்று அர்த்தாந்
தரமருளிச்செய்கிறார் (ஸ்வதஇத்யாதி). (பிடி) கைப்பிடி, (நாலிரண்டு
பண்ணை) நாலிரண்டு ப்ரகாரம். இது உபலக்ஷணம். எத்தனைவட்டமிழுத்தா
லுமென்றபடி. ... ... ... ... ... ... (௩)

மூ.—மஞ்சுயர் மாமணிக் குன்றமேந்தி
மாமழை காத்தொரு மாயவானை
அஞ்ச வதன் மருப்பொன்றுவாங்கு
மாயர்கொல் மாயமறியமாட்டேன்
வெஞ்சுடராழியும் சங்குமேந்தி
வேதமுன்னோதுவர் நீதிவானத்
தஞ்சுடர்போன்றிவரார்கொலென்ன
வட்டபுய கரத்தேனென்றாரே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மஞ்சு | மேகமண்டலத்தளவும் | ஏந்தி | தூக்கி |
| உயர் | உயர்ந்த | மாமழை | பெருமழையை |
| மாமணி | ஶ்லாக்யமான ரத்நங்களையுடைத்தான | காத்து | தடுத்து, |
| | | ஒரு | ஒப்பற்ற |
| குன்றம் | கோவர்த்தநகிரியை | மாயம் | ஆஶ்சர்யமான |

| | | | |
|---|---|---|---|
| ஆனை | குவலயாபீடம் | சங்கும் | ஸ்ரீபாஞ்சஜந்யத்தை யும் |
| அஞ்ச | நடுங்க | ஏந்தி | தரித்து; |
| அதன்மருப்பு ஒன்று | அதின் தந்தமொன்றி [னை | வேதம்முன் | வேதம்போலே |
| வாங்கும் | பறிக்கும் | ஓதுவர் | வார்த்தைசொல்லா ன்றார்; |
| ஆயர்கொல் | க்ருஷ்ணனோ! [களா | நீதி | முறைதப்பாத |
| மாயம் | ஆஶ்சர்யமானசெயல் | வானத்து | பரமபதத்திலே நித் வாஸம்பண்ணு |
| அறியமாட்டேன் | அறிகிலேன்; [டைய | அஞ்சுடர்போன்ற | பரஞ்சோதிபோ யிராநின்றுள்ள |
| வெஞ்சுடர் | உச்ரதேஜஸ்ஸையு | | |
| ஆழியும் | திருவாழியாழ்வானை யும் | | |

இவர் ஆர்கொல்என்ன; அட்டபுயக த்தேனென்றாரே. (ச

வ்யா.—நாலாம்பாட்டு. (மஞ்சுயரித்யாதி) † க்ருஷ்ணாவதார பின்னாட்டுகிறபடி.

† மேகபதத்தளவும் செல்ல ஓங்கி ரத்நங்களையுடைத்தாயிரு கிற கோவர்த்தநகிரியைத்தரித்து. (க) † [கடுவாய்ச்சின வெங்கண் களிற்றினுக்குக் கவளமெடுத்துக்கொடுப்பானவன்போல்] மத்தகஜ கள்போலேயாயிற்று மேகங்கள்; அவற்றுக்குக் கவளங்கொடுப் ரைப்போலேயாயிற்று மலையையெடுத்துக்கொடு நின்றபோதிருந் படி. (மாமழைகாத்து) விநாசத்தைப்பண்ணுவதாய், பரிஹரிக்கவ தான மழையைப்பரிஹரித்து. (ஒருமாயவானை) அகப்படிலுமக பட்டுத் தப்பிலும்தப்பலாம்படி யிருக்கும் கேவலமானையன்றிக்கே புத்திபூர்வகமாக நலியவேணுமென்று நிறுத்தினதாயிற்று. (அஞ்ச இதுக்குமுன் பயம் வ்யுத்பத்திபண்ணியறியாத்து பயப்பட. (அதன் மருப்பொன்றுவாங்கும்) அதினுடைய கொம்பைக் குப்பைக்கீரை பிடுங்குமாபோலே அநாயாஸேந வாங்கும். (ஆயர்கொல்) § ஆனை வாசியறியாமையாலே † பலித்துக்கொண்டுநின்றதித்தனை. (மாய மறியமாட்டேன்) அவனுடைய ஆஶ்சர்யமான செயல்கள் எனக் கொன்றும் தெரிகிறதில்லை.

(வெஞ்சுடராழியும்சங்குமேந்தி) திவ்பாயுதங்களைத்தரித்து (வேதமுன்னோதுவர்) அருளிச்செய்கிறவார்த்தை யடைய வேதம் போலே யிராநின்றது. (நீதிவானத்து) முறைகெடாதபடி பரிமாறக் கடவ பரமபதத்திலே. (அஞ்சுடர்போன்று)(உ) †"அத² யத³த꞉ பரோ தி³வோ ஜ்யோதிர் தீ³ப்யதே - அதயததஃபரோதிவோஜ்யோதிர்தீப்யதே". (அட்ட

(க) பெரி-திரு-ரு-டு-ச. (உ) சாந்தோ-
§ இடையனுகையாலே ஆனைவாசியறியான்.

புயகரத்தேன்) ஆத்தனை தூரஸ்த்தனென்று கைவாங்கவேண்டா, உனக்காகக் கிட்டவந்திருக்கிறவன் காணென்றார்... ... (ச)

அரு.—நாலாம்பாட்டு. (மஞ்சுயரித்யாதி) கீழ்ப்பாட்டில் ஸ்ரீமதுரைப் பெண்களுக்காகவன்று, உனக்காகவந்தேன் என்னச்செய்தேயும், (க) "கரு வலர்க் கூந்தலொருத்திதன்னை" என்கிறபாட்டில் சொல்லுகிறபடியே ஒரு வர்க்கும் மெய்யனல்லனென்றெண்ணி அவர்வார்த்தை மெய்கொள்ளாதே, இடைச்சிகளுக்காக மலையெடுத்தும், மதுரைப்பெண்களுக்காக யானைகொன் றும், தன்னுடைச்சோதியில் விருப்பத்துடனிருந்தும், எனக்காகவிருக்கிறே னென்றும், வேதவாக்யம்போலே சொல்லாநின்றார் என்றுகொண்டு ஈடு பட "நானுனக்காகவே ஸந்நிஹிதனாயிருக்கிறேன்" என்றாராக ஸங்கதி ஸ்ரீகரித்து ஸூசிப்பிக்கிறார் (க்ருஷ்ணேத்யாதி).

"மா" என்றதுக்கு - ஶ்லாக்யமென்று அர்த்தமாய் *மணிக்காதல், பெரு மை என்று அர்த்தமாய் * குன்றத்துக்காதல் விசேஷணமாகை ஸ்பஷ்டமெ ன்று வாக்யார்த்தமருளிச்செய்கிறார் (மேகேத்யாதி). "எந்தி" என்று - ஏவேந்தி என்றாற்போலே சொன்னதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உடுவாயித்யாதி). (பலித்துக்கொண்டு) முன்னே தோற்றிக்கொண்டு.

பரமபதநாதனை தேஜஸ்ஸாகச் சொல்லுவாருண்டோவென்ன வருளிச் செய்கிறார் (அதேத்யாதி). ... ... ... ... (ச)

மூ.—கலைகளும் வேதமும் நீதிநூலும்
கற்பமும் சொல்பொருள்தானும் மற்றை
நிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும்
நீர்மையினாலருள் செய்து நீண்ட
மலைகளும் மாமணியும் மலர்மேல்
மங்கையும் சங்கமும் தங்குகின்ற
அலைகடல்போன்றிவ ரார்கொலென்ன
வட்டபுய கரத்தேனென்றாரே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கலைகளும் | வேதத்தில் மேல்பாகத்தையும் வேதாந்த ஸூத்ரங்களையும் | பொருளும் | மீமாம்ஸையையும் |
| | | மற்றை | இன்னமும் |
| | | நிலைகளும் | (இவற்றில் சொன்னபடியநுஷ்டிப்பாரடையும்) பூமிகளையும் [தாலே |
| வேதமும் | முன்பாகத்தையும் | | |
| நீதிநூலும் | இதிஹாஸாதிகளையும் [ம் | நீர்மையினால் | சேஷித்வஸ்வபாவத் |
| கற்பமும் | கல்பஸூத்ரங்களையு | வானவர்க்கும் | தேவர்களுக்கும் |
| சொல்லும் | வ்யாகரணத்தையும் | | |

(க) பெரு - திரு - சு - ரு.

| | |
|---|---|
| பிறர்க்கும் | மநுஷ்யர்களுக்கும் |
| அருள்செய்து | தந்து, |
| நீண்டமலைகளும் | உயர்ந்தமேருபர்வதம்போன்றதிருத்தோள்களும் |
| மாமணியும் | ஸ்ரீகௌஸ்துபமும் |
| மலர்மேல்மங்கையும் | தாமரைப்பூவைப்பிறந்தகமாகவுடைய பெரியபிராட்டியாரும் |
| சங்கமும் | ஸ்ரீபாஞ்சஜந்யமும் |
| தங்குகின்ற | எப்போதும்நிலைபெ றுநிற்கிற |
| அலைகடல்போன்ற | அலையெறியும்கட போன்ற |
| இவரார்கொலென்ன; அட்டபுயக தேனென்றார். | ( |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (கலைகளும்) †வேதத்திலுபரிதநபாக தையும், வேதாந்த ஸூத்ரங்களையும். (வேதமும்) பூர்வபாகமு (நீதிநூலும்) அவற்றை உபப்ரும்ஹிக்கக்கடவ இதிஹாஸாதிகளு (கற்பமும்) கல்பஸூத்ரமும். (சொல்) பதங்களை நிர்வஹித்து கொடுக்கக்கடவ வ்யாகரணமும். (பொருளும்) †ஆர்த்தவிசாரம்ப ணக்கடவ மீமாம்ஸையும். (நிலைகளும்)இவற்றில்சொல்லுகிற ஸாத ங்களை அநுஷ்ட்டித்தார்க்கு ப்ராப்யமாகச்சொல்லுகிற பூமிகளு ப்ரஹ்மாதிகளுக்கும் மநுஷ்யர்களுக்கும். (நீர்மையினாலருள்செய்து சேஷித்வஸ்வபாவத்தாலே கொடுத்து.

(நீண்டவித்யாதி) மேருபோலேயிருக்கிற தோள்களும் †ரத்ந களுக்குத்†தானே, கௌஸ்துபமுண்டாயிருக்குமே; பெரியபிராட் யாரும் ஸ்ரீபாஞ்சஜந்யமும். (தங்குகின்ற) †இவை ஒருகாலுண்டா ஒருகாலில்லையாம் கடல்போலன்றிக்கே, தங்குகின்றகடல்போலே யிருக்கிற இவரார்தான். (அட்டபுயகரத்தேன்) கடல்போலே இழி வொண்ணாதபடி அபரிச்சிந்நனென்றிருக்கவேண்டா, உனக்கு நெ சால் பரிச்சேதிக்கலாம்படிவந்து நிற்கிறவனென்றார். ... ...(ரு

அரு—அஞ்சாம்பாட்டு. (கலைகளுமித்யாதி) நானுனக்காகவே ஸங்கிஹி ணயிருக்கச்செய்தேயும், சேஷித்வமுறையாலே பஹுவிதோபகாரங்களை பண்ணிப் பெருமையாலும் கடல்போலிருக்கையால் பரிச்சேதிக்கப்போ காதே யிருக்கிறாரென்று நினைத்து, "உம்மை அவகாஹித்து அநுபவிக்க போகிறதில்லை" என்று பிற்காலிக்க; நீ அநுபவிக்கலாம்படியன்றோ இங்கே வந்திருக்கிறேனென்று சொல்லுகிறாரென்று ஸங்கதி.

"கலைகளும்" என்னுமிடத்தில் - வேதம்முதலானவற்றையெல்லாம்சொ ல்லும்போது, மேல் தனித்தெடுக்கிறவற்றுக்கு வையர்த்யம் ப்ரஸங்கிக்கை யால் ஸங்கோசிக்குமளவில், ஆராத்யமான பகவத்ஸ்வரூபபரங்களும், ஆரா தகஸ்வரூபப்ரதிபாதகங்களும், அந்த உபயோபப்ரும்ஹணங்களும், ஆராத

கா ரபோதகங்களும், இவையித்ரனைக்கும் சப்தநிர்வாஹகங்களும், அர் நிர்வாஹகங்களுமாக ஒருசேர்த்தி திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் வதத்திலித்யாதி). ஆராத்யஸ்வரூபமாகையால் கீழ் ப்ரஹ்மஸூத்ரம் சொல் பட்டாலும், இங்கே ததர்த்தவிசாரபரங்களும் விவக்ஷிதங்களென்றருளிச் ய்கிறார் (அர்த்தவிசாரமித்யாதி).

கடலில் மலைகளுக்கு த்ருஷ்டாந்தமாகத் தோள்களைச் சொல்லிற்றே கிலும், கடலில் ரத்நங்களுக்கு த்ருஷ்டாந்தமேதென்னும் சங்கையை வெதிக்கிறார் (ரத்நங்களுக்கித்யாதி). (தானே) என்றவநந்தரம், த்ருஷ்டாந்த தென்ன என்று கூட்டுவது, வர்த்தமாநார்த்தம் (இவையொருகாலித்யாதி).

மூ —எங்ஙனும் நாமிவர் வண்ணமெண்ணி
  லேதுமறிகில மேந்திழையார்
சங்குமனமும் நிறைவுமெல்லாம்
  தம்மனவாகப் புகுந்து தாமும்
பொங்கு கருங்கடல் பூவை காயா
  போதவிழ் நீலம் புனைந்த மேகம்
அங்ஙனம்போன் றிவரார்கொலென்ன
  வட்டபுய கரத்தேனென்றாரே. (சு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ம் | நாம் | புகுந்து | வந்து ப்ரவேசித்து, |
| வர்வண்ணம் | இவர்படிகளை | பொங்கு | பெரியகிளர்த்தியையு |
| ங்ஙன் | எந்தப்ரகாரத்தாலே | கரும் | கறுத்த [டைய |
| ண்ணிலும் | அறியப்புகிலும் | கடல் | ஸமுத்ரம் |
| தும் | ஒன்றும் [லை; | பூவை | பச்சிலைமரம் |
| றிகிலம் | அறியப்போகிறதில் | காயா | காசாம்பூ |
| து | தரிக்கப்பட்ட | போது அவிழ் | காலத்திலேஅலர்ந்த |
| ழையார் | ஆபரணங்களையுடைய அபலைகளது | நீலம் | கருநெய்தல் |
|  |  | புனைந்த | இவற்றுடனேசொல்லப்பட்ட |
| ங்கும் | வளையும் |  |  |
| மும் | மநஸ்ஸும் | மேகம் | மேகஸமூஹம் |
| றவும் | அடக்கமும் | அங்ஙனம்போன்ற | அப்படியிருக்கிற |
| ல்லாம் | இவையெல்லாம் |  |  |
| மனவாக | தம்மதாக அபிமாநித்துக்கொண்டு | இவர்தாமும் ஆர்கொல்என்ன; அட்டபுயகரத்தேன் என்றாரே. (சு) |  |

வ்யா.—ஆறும்பாட்டு. (எங்ஙனுமித்யாதி) †ஆபாதப்ரதீதிமாத்ர ன்றிக்கே நம்முடைய †இயற்றியெல்லாங்கொண்டு இவரையுள்ள ளவெல்லா மறியவேணுமென்று பார்த்தால் ஒன்றுமறியப்போகிற ல்லை. (ஏந்திழையித்யாதி) "பிறருடைய பாஹ்யபரிகரங்களோடு

ஆந்தரபரிகரங்களோடு வாசியறத் தம்முடையதாக்கவேணும்
என்று அதுக்காக ஆபரணம்பூண்டிருக்கக்கடவ அபலைகளுண்
அவர்களுடைய வளையும், மநஸ்ஸும், அகவாயிலடக்கமும், இவை
யெல்லாம் (தம்மனவாகப்புகுந்து) நம்மதென்றிருந்தவையெல்லா
கண்டபோதே தம்மதாம்படியாகவாயிற்று வந்தது.

(தாமுமித்யாதி) † தம்மதாக்கின பரிகரத்தைச்சொல்லுகிற
ஒ ் று உபமாநமாகப் போராமையாலே அங்குமிங்குமாகக் கதி
பொறுக்குகிறார். பெரியகிளர்த்தியையுடைத்தாயிருக்கிற கரு
கடல், பூவை, காயா, †செவ்வியிலே யலர்ந்தநீலம், இவற்றோடொக்
த்தொடுத்தமேகம். (அங்ஙனம்போன்று) சொன்ன உபமாநந்தா
உபமேயத்துக்குப் போராமையாலே அங்ஙனம்போன்றிவரார்செ
லென்ன. (அட்டபுயகரம்) உனக்கறியாமைக்குடலாகச் சொல்ல
நின்றாய், நீ அறிகைக்காகவந்து நிற்கிறவனன்றோ நானென்றார்.

---

அரு.—ஆறும்பாட்டு. (எங்ஙனுமித்யாதி). "பரிச்சேதித்து அநுபவிக்
லாம்படி இங்கேவந்திருக்கிறேன் என்றீர், எனக்குக்கண்டகாட்சிதன்னிலே
ஸர்வஸ்வாபஹாரக்ஷமமானவடிவை அநுபவிக்கப்போகிறதில்லையே" என்ன
எல்லாரும் கண்ணால்கண்டநுபவிக்கலாம்படியன்றோ நான்வந்ததென்ற
ளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

"எங்ஙனும்" எந்தயத்நத்தாலும், நாமிவர்படியெல்லாம் எண்ணப்புகி
என்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (ஆபாதேத்யாதி
(இயற்றியெல்லாம்) யத்நமெல்லாம்.

"பொங்கு" இத்யர்தி - "அங்ஙனம்போன்றிவர் - தாமும் - ஆர்கொல்
என்று அந்வயித்துத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தம்மதாக்கினவித்யாதி
போதிலே - உசிதகாலத்திலே, விகஸிக்கிற - நீலம் - கருநெய்தலென்று ச
தார்த்தமாய், பலிதார்த்தம் (செவ்வியிலேயித்யாதி). ... ... (அ

மூ.—முழுசி வண்டாடிய தண்டுழாயின்
மொய்ம்மலர்க் கண்ணியும் மேனியம் சாந்
திழிசிய கோலமிருந்தவா
றெங்ஙனஞ் சொல்லுகேனோவிநல்லார்
எழுதியதாமரை யன்ன கண்ணு
மேந்தெழிலாகமும் தோளும் வாயு
மழகியதா மிவரார்கொலென்ன
வட்டபுய கரத்தேனென்றாரே. (எ

| பதம். | உரை. |
| --- | --- |
| ண்டு | வண்டுகள் |
| ழுசி | (தேனிலே)முழுகி |
| டிய | ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணுகின்றுள்ள |
| ண் | குளிர்ந்த [ய |
| ழாயின் | திருத்துழாயினுடை |
| மாய் | செறியத்தொடுத்த |
| லர்க்கண்ணி | பூமாலை (சாத்தியருளி |
| யும் | ன) ப்ரகாரத்தை |
| மணி | திருமேனியிலே [யும் |
| ம் | அழகிதான |
| ந்துஇழுசிய | சந்தநத்தாலே யெழுதப்பட்ட |
| காலமிருந்த | அலங்காரமிருந்த ப் |
| வாறும் | ரகாரத்தையும் |
| ங்ஙனம் | எப்படி |

| பதம். | உரை. |
| --- | --- |
| சொல்லுகேன் | சொல்லித்தலைக்கட்டப்போகிறேன்; |
| ஓவி | சித்ரமெழுதுவதில் |
| நல்லார் | வல்லவர்கள் |
| எழுதிய | எழுதின [ற |
| தாமரையன்ன | தாமரையிதழ்போன் |
| கண்ணும் | திருக்கண்களும் |
| ஏந்துஎழில் | மிக்ககாந்தியையுடை |
| ஆகமும் | திருமார்வும் [த்தான |
| தோளும் | திருத்தோள்களும் |
| வாயும் | திருப்பவளமும் |
| அழகியதாம் | அழகாயிராநின்றது; |
| இவர் | இப்படிப்பட்ட அழகையுடைய இவர் |

ஆர்கொல் என்ன, அட்டபுயகரத்தேன் என்றாரே. (எ)

வ்யா.—ஏழாம்பாட்டு. (முழுசியித்யாதி) கிண்ணகத்தி †லிழிவாரப்போலே வண்டுகளானவை மதுபாநமத்தமாய்க் களித்தாடான்றுள்ள திருத்துழாயினுடைய செறியத்தொடுத்த மாலையும். (மேனியித்யாதி) (க) "𑌆𑌵𑌯𑍋𑌃 𑌗𑌾𑌤𑍍𑌰𑌸𑌦𑍃𑌶𑌂 - ஆவயோர்காத்ரஸத்ருசம்" என்கிறபடியே ஸ்வதஃ நன்றான திருமேனியிலே †பழகப்புதைத்து ஆறின சாந்தை அங்கேயிங்கே †இளிம்பாகப் பூசுகை யன்றிக் க வேண்டுமிடங்களிலே சாத்தின கோலமிருந்தபடியும். (எங்ஙனம் சொல்லுகேன்) வாசகசப்தமில்லாததுக்கு என்னால் வாசகமிட்டுச் சொல்லப்போமோ?

(ஓவியித்யாதி) சித்ரமெழுதுகையில் குசலராயிருக்குமவர்கள் எழுதின தாமரைப்பூப்போலேயிருக்கிற கண்களும்; அதாகிறது - கண்டபின்பு † இமையாதேயிருந்தபடி. (ஏந்தெழிலித்யாதி) மிக்க அழிலையுடைத்தாயிருக்கிற திருமார்வும், தோள்களும், வாயுமழகியராயிருந்தார்; இவரார்கொலென்ன; (அட்டபுயகரம்) இவ்வொப்பின்ன யழகைக்கொண்டு பரமபதத்திலேயிருக்கிறவனென்று கூசவண்டா, உனக்காக வந்து நிற்கிறவன்நானென்றார். ... (எ)

அரு.—ஏழாம்பாட்டு. (முழுசியித்யாதி) "எல்லாரும் கண்ணாலே யநுபக்கலாம்படிவந்து நிற்கிறேன்" என்னுநின்றீர், உம்முடைய கோலமும்,

(க) வி - பு - ௫ - உ௦ - சு.

இமைகொட்டாமல் பார்க்கிறகண்களும், திருமார்வும், தோள்களும், வாயு
ஸாதிரிபோக்யமாயிருக்கிறதென்று கூசினவளை, கூசவேண்டாவென்கி
றென்று ஸங்கதி.

(இழிவாரைப்போலே) என்றவநந்தரம், ஒன்றுக்கொன்று துணைதே
யிழிந்த என்று கூட்டுவது. "அஞ்சாந்து" என்கைக்கு, சாந்துக்கழகே
ன்ன; (பழகவித்யாதி). (இளிம்பாக) அசாதுர்யமாக.

(இமையாதே) இமைகொட்டாதே. ... ... ... (

மூ.—மேவி யெப்பாலும் விண்ணோர் வணங்க
வேதமுரைப்பர் முந்நீர்மடந்தை
தேவி யப்பாலதிர் சங்க மிப்பால்
சக்கரம்மற்றிவர் வண்ணமெண்ணில்
காவியொப்பார் கடலேயுமொப்பார்
கண்ணும் வடிவும் நெடியராயென்
ஆவியொப்பா ரிவரார்கொலென்ன
வட்டபுயகரத்தேனென்றாரே. (

| பதம். | உரை. |
|---|---|
| விண்ணோர் | நித்யஸூரிகள் [ளும் |
| எப்பாலும் | எல்லாத்திக்குகளி |
| மேவி | பொருந்தி நின்று |
| வணங்க | வணங்கி |
| வேதம் | வேதங்களாலே |
| உரைப்பர் | ஸ்தோத்ரம்பண்ணுநிற்பர்கள்; |
| முந்நீர் | திருப்பாற்கடலிலே திருவவதரித்த |
| மடந்தை | பெரியபிராட்டியார் |
| தேவி | இவருக்குப்பட்டமஹிஷியாயிராநின்றாள்; |
| அதிர் | முழங்காநின்றுள்ள |
| சங்கம் | ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வான் [றான்; |
| அப்பால் | இடவருகேயிராநின் |
| சக்கரம் | திருவாழியாழ்வான் |
| இப்பால் | வலவருகேயிராநின்றான்; |

| பதம். | உரை. |
|---|---|
| மற்று | அதற்குப்பின்பு |
| இவர் | இவருடைய |
| வண்ணம் | நிறத்தை |
| எண்ணில் | ஆராய்ந்துசொல்ல புக்கால் [ |
| காவி | கருநெய்தல்பூநிற |
| ஒப்பார் | ஒப்பவரும் [ |
| கடல் | ஸமுத்ரத்தின்நிற |
| ஒப்பார் | ஒப்பவரும் [ |
| கண்ணும் | திருக்கண்களின் அழ |
| வடிவும் | வடிவழகிலும் |
| நெடியராய் | இப்படிப்பட்ட வெ ன்று அளவிடக் |
| என் | எனக்கு [டாதவரு |
| ஆவியொப்பார் | ப்ராணனையொத்த ருமாயிராநின்றா |
| இவர்ஆர்கொலென்ன | அட்டபுயகத்தேன் என்றாரே. ( |

வ்யா.—எட்டாம்பாட்டு. (மேவியித்யாதி). § ப்ரஹ்மாதிக
தரையில் கால்பாவாதேயிறே யிருப்பது. அவர்கள் கந்தத்தையு

§ (பா) இந்த்ராதிகள்.

ருவருத்திருக்கக்கடவ நித்யஸூரிகள் பார்த்தபார்த்தவிடமெங்கும் அங்குப்போலேபரிமாற. (வேதமுரைப்பர்) இவர்வாயால் சொல் கிறது வேதமாயிராநின்றது (முந்நீர்மடந்தைதேவி) †முந்நீர்மடந் தயென்று - பெரியபிராட்டியாராகவுமாம், ஸ்ரீபூமிப்பிராட்டியா ாகவுமாம். (அப்பாலதிர்சங்கம்) †ஸ்ரீபூமிப்பிராட்டியாரானபோது வ்விடத்திலே அதிருகிற சங்கமென்றுகிறது; பெரியபிராட்டியா ானபோது, அவரிருக்கிறவிடத்துக்கு மற்றையிடத்திலே யதிருகிற ங்கம். (இப்பால்சக்கரம்) ஓரிடத்திலேநின்றால் மற்றையிடத்தை ப்பால் என்னக்கடவதிறே.

(மற்றித்யாதி) இவருடைய நிறத்தைப்பார்க்கில் காவிபோலே ம் கடல்போலேயுமிராநின்றார். (கண்ணித்யாதி) கண்ணுக்கும் டிவுக்கும் உபமாநமில்லை, கண்ணுக்கெல்லையுண்டாகிலாயிற்று வடி க்கெல்லையுள்ளது. (என்னுவியித்யாதி) வ்யதிரேகத்தில் ஜீவிக்க ிதாப்படியிராநின்றார், இவரார்தானென்ன; (அட்டபுயகரம்) சான்னபடி †பொல்லாது, (க) "ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதம்-ஜ்ஞாநீத்வாத் மைவமேமதம்" கேட்டறியாயோ? என்றார். உன்னை யொழிய ஜீவி தவன்காண் நானென்கிறார். ... ... ... ... (அ)

---

அந.—எட்டாம்பாட்டு. (மேவியித்யாதி) நித்யஸூரிபோலப்பராயிருந்தி ன்றது பொய்யோ, ஸூரிகள் வணங்க நாய்ச்சிமாரும் நீருமாய், (உ) "ஸமஸ்தபரமோதாரௌ சங்கசக்ர கதாதரௌ - ஸமஸ்தபரமோதாரௌ சங்கசக்ர ாதரௌ" என்கிறபடி ஆயுதச்சேர்த்தியும் பரமபுருஷலக்ஷணமான கண்ணும் டிவுமாயிருந்தீரே, கிட்டியநுபவிக்கமாட்டேனென்னுநின்றுகொண்டு, உம் ைப்பிரிந்தால் பிழைக்கவும்மாட்டேனென்ன; நீ இங்ஙன்படுகிறதென், ன்னைவிட்டுப் பிரியக்ஷமனன்றுகாண் நானென்றாரென்று ஸங்கதி.

(அங்குப்போலே) பரமபதத்திற்போலே. மூன்றுவகைப்பட்ட நீரையு டைய இந்தஸமுத்ரம்போலேயிருக்கிற க்ஷீராப்த்தியிற்பிறந்த மடந்தையெ று சப்தார்த்தம் விவக்ஷித்தருளிச்செய்கிறார் (முந்நீரித்யாதி). முந்நீர்சூழ்ந்த டந்தையென்று அர்த்தாந்தரம் (ஸ்ரீபூமியித்யாதி).

(சொன்னபடிபொல்லாது) என்றது - நீயெனக்கு ஆத்மாவாயிருக்க மை உனக்கு ஆத்மாவாகச்சொன்னபடி. பொல்லாதென்றபடி. ... (அ)

---

(க) கீதை - 7-18. (உ) ரா - யு - ககஎ - கரு.

மூ.—தஞ்சமிவர்க்கென் வளையுநில்லா
நெஞ்சமும் தம்மதே சிந்தித்தேற்கு
வஞ்சி மருங்குல் நெருங்க நோக்கி
வாய்திறந்தொன்று பணித்ததுண்டு
நஞ்சமுடைத்திவர் நோக்கும் நோக்கம்
நானிவர்தம்மை யறியமாட்டேன்
அஞ்சுவன் மற்றிவரார்கொலென்ன
வட்டபுயகரத்தேனென்றாரே. (க

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| என் | என்னுடைய | ஒன்று உண்டு | மிகவும் ரஹஸ்யமா ஓரர்த்தமுண்டு; |
| வளையும் | வளைகளும் | நோக்கும்நோக்கம் | பார்க்கிறபார்வை |
| தஞ்சம் | நிஶ்சிதமாக | நஞ்சம்உடைத்து | விஷத்தோடுகூடிய போலே யிராநி றது; |
| இவர்க்கு | இவர்க்காக | நான் | நான் |
| நில்லா | தங்குகிறதில்லை (சழ லாநின்றன) | இவர்தம்மை | இவரை |
| சிந்தித்தேற்கு | ஆராய்ந்தவென்னு | அறியமாட்டேன் | ஒன்றுமறிகிலேன்; |
| நெஞ்சமும் | மநஸ்ஸும் [டைய | மற்று | அதுக்குமேலே (இ ரைப்பார்த்தவா |
| தம்மதே | அவரதாயிருந்தது; | அஞ்சுவன் | அஞ்சாநின்றேன்; |
| வஞ்சி | நீர்வஞ்சிக்கொம்பு போன்ற | இவரார்கொல்என்ன; அட்டபுயக தேன் என்றாரே. | |
| மருங்குல் | இடையானது | | |
| நெருங்க | துவளும்படியாக | | |
| நோக்கி | பார்த்து [றந்து | | |
| வாய்திறந்து | திருப்பவளத்தைத்தி | | |
| பணித்தது | அருளிச்செய்தது | | |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (தஞ்சமித்யாதி) நிஶ்சிதமாக இ க்கென்வளைநிற்கிறதில்லை. †இங்கே குடியிருப்பாய் அவர்க்காக வ திக்கிறனவாயிருந்தன. (க) "ஶைதில்யம்-சைதில்யம்" இத்யாதி. † அ ரைப்போலேவளையும் நிற்கிறனவில்லை. †இவருடைய பூர்வவ்ருத் தோடு ஸாம்யமுண்டாயிற்று இவற்றுக்குமிருப்பது. (என்வளையு † "என்னுடையவை" என்று ப்ரமித்தவளவேயாய், கிட்டினவா அவரதாயிராநின்றது. பாஹ்யபரிகரங்களிப்படியேயானாலும் உள் ண்டானவைதானும் நமக்குத்தொங்குமோ? என்றிருந்தேன், (நெ சமும்தம்மதேசிந்தித்தேற்கு) (உ) [உற்றெண்ணிலதுவுமற்றாங்கவ றன்னதே] ஆபாதப்ரதீதியில் நம்மதென்றிருந்தவித்துணையாய் ஆ ய்ந்தவாறே அகவாயில் ஆபரணமும் அவரதாயிருந்தது. (வ

(க) (உ) தி-வாய்.

த்யாதி) †பண்டே தொட்டார்மேலே தோஷமாய் "இற்றது, முறி ந்து" என்னும்படியாயிற்று இடைதானிருப்பது, இதிலே தயை ண்ணாதே இது துவளும்படி நோக்கினாயிற்று. (வாயித்யாதி) -ருவு வெளிப்பாட்டில்சொன்னவார்த்தை இப்போதென்னால் உங் ளுக்குச்சொல்லப்போகாது. † அப்போது சொன்னபாசுரங்கிட நச்செய்தேயும் அதரஸ்ப்புரணத்திலே துவக்குண்டமைதோற்ற பாய்திறந்து) என்கிறாள். (ஒன்று) † இன்னமும் அவன்சொல்லில் சால்லுமித்தனை; என்னாலது அநுபாஷிக்கப்போகாது.†அதுக்குக் நுத்து - இடை ஒடிவதுபோலேயிராநின்றது, ஒடியாதபடி என் தாளாலே அணைப்பேனோ? என்றுபோலே.

(நஞ்சமித்யாதி) † இவர்பார்க்கிறபார்வை, விபாகத்தில் நம்மை டிக்கும்போலே யிராநின்றது. † சொன்ன வார்த்தையை க்ரயம் சலுத்துவாரைப்போலே யிராநின்றார். † அதொரு உக்திமாத்ரமா ாமே அத்தை அர்த்த க்ரியாகாரியாக்கி, நினைக்கிறார்போலே யிரா ன்றது. (நாணித்யாதி) இவர் ரக்ஷகராயிருக்கிறாரோ? நம்மை டித்தேவிட விருக்கிறாரோ? அறிகிறிலேன். (அஞ்சுவன்) இவர் சால்லுகிற வார்த்தைதான் பொல்லாதல்லவிறே; ஆகிலும் அவ ரயும் நம்மையும் பார்த்தவாறே அஞ்சாநின்றேன். அப்பெரியவ க்கு இவ்வாற்றாமை யுண்டாகக் கூடுமோ? என்றஞ்சாநின்றேன்; வரார்தான்? என்ன. (அட்டபுயகரம்) ஒருவசநங்கொண்டு ஈஶ் ரனென்றஞ்சவேண்டா; நீ, அஞ்சாமைக்கு உன்னோடு †ஸஜாதீய ய்வந்து நிற்கிறவனன்றோ நானென்றார். ... ... (கூ)

அரு.—ஒன்பதாம்பாட்டு. (தஞ்சமித்யாதி) "நானுன்னைவிட்டுப்பிரிய உமனன்று என்றுநின்றுகொண்டு தாமிவளோடு கலந்து பரிமாற; இவளந்த சையில் மேல்வரப்புகுகிற விஶ்லேஷத்தையெண்ணி அஞ்ச, இவளச்சம் வர் தீர்த்தாராக உருவு வெளிப்பாட்டிலநுபவத்தைச் சொல்லுகிறாளென்று ங்கதி.

வளைநில்லாவிட்டால், "என்வளை" என்பானென்னென்ன வருளிச்செய் றார் (இங்கேயித்யாதி). "வளையும்" என்ற சகாரதாத்பர்யம் (அவரைப்போ லயித்யாதி). இப்போது அவர் பிரியமாட்டேனென்றிருக்கிறாரோவென்ன ருளிச்செய்கிறார் (இவருடையவித்யாதி). அதாவது (க) *பேதை நின்னைப் ரியேன் என்றகன்றவரன்றோவென்கை. அன்றிக்கே, வ்யாக்யாத்ரு வாக்ய ாய், ஆழ்வாருடைய பூர்வவ்ருத்தம்போலே வளையும் சழலுகிறதென்னவு

(க) கூ - ரு - ரு.

மாம்; அதாவது - எம்பெருமான் கிட்டினவாறே பிற்காலிக்கிற ஆழ்வாரை போலே யென்கை. (க) * வளவேழுலகுதலையெடுக்கை எல்லார்க்கு மொ ழுமிறே. "என்" என்றதுக்கு யோஜநாந்தரம் (என்னுடையவித்யாதி). நீ வஞ்சிக்கொம்புபோலேயிருக்கிற, மருங்குலுண்டு-இடை, அது நெருங்க-து ளும்படியாக, நோக்கி-ஸம்ஶ்லேஷித்து என்று சப்தார்த்தமாய் தாத்பர்யம ளிச்செய்கிருர் (பண்டேயித்யாதி). "ஒன்று" என்ற ஸாமாந்யோக்திக்கு தாத்பர்யம் (உருவுவெளிப்பாட்டிலித்யாதி). "ஒன்றுபணித்ததுண்டு" என் வளவு அமைந்திருக்க "வாய்திறந்து" என்றதுக்குத் தாத்பர்யம் (அப்பே தித்யாத). "ஒன்று" என்றது - அத்விதீயமென்ருய், அதிரஹஸ்யமென்ருய் தாத்பர்யாந்தரமருளிச்செய்கிருர் (இன்னமுமித்யாதி). "வஞ்சிமருங்குல்நெ ருங்க" என்றவாக்யத்தையும், மேல் "அட்டபுயகரத்தேன்" என்றபதத்தி தோற்றின எட்டுத்தோள்களையும் திருவுள்ளம்பற்றி அந்தபரமரஹஸ் தன்னை வெளியிடுகிருர் (அதுக்கித்யாதி). மத்யமபதமானநமஸ்ஸில் பிறந் துணிவும் மிகவும் ஸூக்ஷ்மமாயிராநின்றது, ரக்ஷகத்வபாரிப்பாலே நானே ரக்ஷிக்கிறேனென்ற சரமரஹஸ்யமென்று இதுக்கு ஸ்வாபதேசம்.

(இவர் ஸம்ஶ்லேஷிக்கிற ஸம்ஶ்லேஷம் விஷமிஶ்ரமாயிருக்கிறது) எ றதுக்கு உட்கருத்தருளிச்செய்கிருர் (இவரித்யாதி). இப்போது ஆநந்த(நு கந்தாவஹமாயிருக்கையால் இத்தனையும் விஶ்லேஷகாலத்தில் பாதகமா முடிக்குமென்று கருத்து. கீழே "நெருங்கநோக்கி" என்ருளே, மீளவு "நோக்கும் நோக்கம்" என்கிறதென்னென்ன வருளிச்செய்கிருர் (சொ னவித்யாதி). விவரணம் (அதொருவித்யாதி). இடையொடியாமை தோ களாலே அணைத்த ஸம்ஶ்லேஷத்தைச் சொல்லுகிறதென்றுகருத்து. (சொ லுகிறவார்த்தை) என்றது - ஸ்வாபதேசத்தில் சரமஶ்லோகம். (ஸஜாதீ ருய்) என்றது - "மாம்" என்றதில் ஸாரதியாய் ஸஜாதீயனுனற்போலே இவளுடன்கலந்து பரிமாறினமையைப்பற்ற. ... ... ... (க

மூ.—மன்னவன் தொண்டையர் கோன் வணங்கும்
  நீண் முடிமாலை வயிர மேகன்
தன்வலி தன்புகழ் சூழ்ந்த கச்சி
  யட்டபுயகரத்தாதி தன்னை
கன்னி நன்மா மதிள் மங்கைவேந்தன்
  காமருசீர்க் கலிகன்றி குன்ருு
இன்னிசையால் சொன்ன செஞ்சொல் மாலை
  யேத்த வல்லார்க்கிடம் வைகுந்தமே. (கo

திருமங்கை யாழ்வார் திருவடிகளே சரணம்.

---

(க) தி-வாய் - க - ௫ -

| பதம். | உரை. |
|---|---|
| யிரமேகன் | வயிரமேகனென்னும் |
| ன்னவன் | ராஜாவான |
| தாண்டையர் | தொண்டைமான் சக்ரவர்த்தியாலே |
| கோன் | |
| ணங்கும் | ஸேவிக்கப்படுமவராய் (அத்தாலே) [ய |
| ள் | நீண்டமுடியையுடை |
| ால் | ஸர்வேஶ்வரனாய், |
| ன் | அந்தராஜாவினது |
| லி | மிடுக்காலும் |
| ன்புகழ் | அவன்யசஸ்ஸாலும் |
| ழ்ந்த | விஞ்சின |
| ச்சி | கச்சிநகரில் |
| ட்டபுயகரத்து | திருவட்டபுயகரத்திலே எழுந்தருளியிருக்கிற [ஷயமாக, |
| திதன்னை | ஸர்வகாரணபூதன் வி |
| ன்னி | ஒருவராலும மதிக்கவொண்ணாத |
| ல் | நன்றான |
| ர | பெரிய |

| பதம். | உரை. |
|---|---|
| மதிள் | மதிளாலே சூழப்பட் |
| மங்கை | திருமங்கைக்கு [ட |
| வேந்தன் | ராஜாவாய் |
| காமரு | எல்லாரும்விரும்பும்படியான [ரான |
| சீர் | குணங்களையுடைய |
| கலிகன்றி | ஆழ்வார் |
| குன்றா | குறைவில்லாத |
| இன் | இனிய |
| இசையால் | இசையுடனே |
| சொன்ன | அருளிச்செய்த |
| செம் | அழகிய |
| சொல்மாலை | சப்தஸந்தர்ப்பத்தையுடைய இத்திருமொழியைக்கொண்டு |
| ஏத்தவல்லார்க்கு | ஸ்தோத்ரம்பண்ணுகிறவர்களுக்கு |
| இடம் | வாஸஸ்த்தாநம் |
| வைகுந்தம் | பரமபதமாம். (௧௦) |

வ்யா.—பத்தாம்பாட்டு. (மன்னவனித்யாதி) ராஜா தொண்டைான் சக்ரவர்த்தி; அவன் பக்தாபிமாநியாய் வணங்கின பின்பாயிறு ஈஶ்வரன் முடி நல்தரித்ததும் ஸர்வேஶ்வரத்வம்நிலைநின்றதும். ன்பெல்லாம் † ஈரரசுபட்டிறே போந்தது. (வயிரமேகன்) வயிரமகனென்று †அவற்கு§(க்குடி)ப்பேர் (தன்வலி) எதிரிகளை யழியச்சய்கைக்கீடான அவன்மிடுக்கும், ரக்ஷணத்தால் வந்த புகழும் விஞ்பாயிற்றிருப்பது. திருவட்டபுயகரத்தில் நிற்கிற ஜகத்காரண பூதக்கவிபாடிற்று. (கன்னியித்யாதி) அரணாகப் போரும்படியாய், திசாயிருக்கிற மதிளையுடைய திருமங்கையிலுள்ளார்க்கு ப்ரதாநய் எல்லார்க்கும் ஸ்ப்ருஹை பண்ணவேண்டும்படியான ஶ்ரீவைணவ லக்ஷ்மியையுடைய ஆழ்வார். (குன்றா) தான்குறையக் கடதன்றிக்கே, கேட்டார் செவிக்கும் ஆகர்ஷகமாம்படியான இசையுடைத்தாய், † ஆஶ்ரயந்தான் செவ்விதா யிருக்கிற இவற்றைக்காண்டு. (ஏத்தவல்லார்க்கிடம் வைகுந்தமே) உருவு வெளிப்பாட்

§ குண்டலிதாக்ஷரம் க்வாசித்கம்; அரும்பதத்துக்கு பாடமில்லை.

டாலே அநுபவித்துப் பிறர்க்கிருந்து சொல்லவேண்டாதே (
"தேவைஸ்ஸஹ மாதம்மதேம - தேவைஸ்ஸஹ மாதம்மதேம" என்கிறப
யே நித்யாநுபவம் பண்ணிக் களிக்கலாம் தேசத்திலே புக
பெறுவர். ... ... ... (க

பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே சரணம்.



அரு.—பத்தாம்பாட்டு. (மன்னவனித்யாதி) (ஈரரசுபட்டிறே) என்று
வணங்குகைக்குமுன், (உ) "த்வம்மேஹம்மே - த்வம்மேஹம்மே" என்றி
போந்தது, (ரு) "யதாராஜாததாப்ரஜா: - யதாராஜாததாப்ரஜா:" என்று எ
லாரும் வணங்கினார்களென்று கருத்து. (அவற்குப்பேர்) சக்ரவர்த்திக்கு
பேர். (ஆஶ்ரயந்தான்) என்றது - (கானா)காநாஶ்ரயமானது செஞ்சொல்
யிருக்குமென்கை. ... ... ... ... ... ... ... (க

ஜீயர் திருவடிகளே சரணம்.

இரண்டாம்பத்து எட்டாந்திருமொழி முடிந்தது.



(க) (உ) பட்டர்முக்தகம். (ரு) முக்தகம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# பெரியதிருமொழி - உ - ம் பத்து கூ - ம் திருமொழி - சொல்லு ப்ரவேசம்.



வ்யா—(க)†"மன்னவன் தொண்டையர்கோன் வணங்கும்நீண் டிமாலே" என்று தொண்டைமான் சக்ரவர்த்தி திருவட்டபுயகா திலே அநுகூலித்தபடியை அநுஸந்தித்தார், அந்த ப்ரஸங்கத் லே "பல்லவன்" என்பானொருத்தன் பரமேஶ்வர விண்ணகரத் லே அதிமாத்ரமான ஆநுகூல்யங்களைப்பண்ணி†ஓரோவொன்றை டுத்தது ஆயிரமாம்படி பண்ணினானாயிற்று †பின்பு சோழன்கண்டு து தான் பொறுக்க மாட்டாமையாலே அவைதன்னை †அமைத்த த்தனை.†இனித்தான் பகவத்விஷயத்தில் ஓரடிவர நின்றார், தமக்கு த்தேஶ்யராகவிறே இவர் நினைத்திருப்பது; அத்தாலே அவன்படி ளெல்லாம் தமக்கினிதா யிருக்கையாலே அவற்றை அநுபவித்துப் பசுகிறார். ... ... ... ... ... ... *

அரு.—சொல்லு ப்ரவேசம். கீழ்த்திருமொழியில், உருவு வெளிப்பாட்டி தாய்மாரோடு சொல்லிக்கொண்டிருந்தவிவளுக்கு பரமேச்சுரவிண்ணக திலிருப்பைக் காட்டக்கண்டு தாமானதன்மையாலே அவன்படிகளெல் ம்பேசி, அங்குத்தைக்குக் கிஞ்சித்கரித்தார்படியில் திருவுள்ளமூன்றி யநுப க்கிறாரென்று ஸங்கதி திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (மன்னவனித் தி). (ஓரோவொன்றையெடுத்தது) என்றதுக்கு, ஒரொரு ஆபரணங்களாயி பண்ணிவைத்தானென்று கருத்து. இப்போது காணுமேயென்ன (பின்பு ாழனித்யாதி). (அமைத்து) சேமத்திலேயமைத்து. அநுகூலனாகிலித்தனை ாண்டாடவேணுமோவென்ன (இனியித்யாதி). ... ... ... *

மூ.—சொல்லுவன் சொல்பொருள் தானவையாய்ச்
சுவையூறொலி நாற்றமும் தோற்றமுமாய்
நல்லரன் §நாரணன் நான்முகனுக்
கிடந்தான் தடம்சூழ்ந் தழகாயகச்சி
பல்லவன் வில்லவனென் றுலகில்
பலராய்ப் பலவேந்தர் வணங்குகழல்
பல்லவன் மல்லையர் கோன் பணிந்த
பரமேச்சுர விண்ணகர மதுவே. (க)

(க) உ - அ - கo - § (பா) நான்முகன் நாரணனுக்கு.

| பதம். | உரை. |
|---|---|
| சொல்லு | சப்தம் |
| வன்சொல் | (அதுதன்னிலும்) அருமையானவேதம் |
| பொருள் | வேதார்த்தம் |
| அவை | ஆகியஅவற்றுக்கு |
| தான்ஆய் | நிர்வாஹகனாய், |
| சுவையும் | ரஸமும் |
| ஊறும் | ஸ்பர்சமும் |
| ஒலியும் | சப்தமும் |
| நாற்றமும் | கந்தமும் |
| தோற்றமும் | கண்ணால் காண்கிற ரூபமுமாகிற இவற்றுக்கு |
| ஆய் | நிர்வாஹகனுமாய், |
| நல் | உபகாரகனாய் |
| அரன் | ஸம்ஹர்த்தாவான ருத்ராந்தர்யாமியாய் |
| நாரணன் | (தன்னுடைய நிஜரூபத்தைக்கொண்டு பாலநத்தைப் பண்ணியருளுகிற) நாராயணனாய் |
| நான்முகனுக்கு | *ஸ்ரஷ்டாவான ப்ரஹ்மாவுக்கு அந்தர்யாமியாய்நின்ற ஸர்வேஶ்வரனுக்கு |

| பதம். | உரை. |
|---|---|
| இடந்தான் | வாஸஸ்தாநமாவது |
| தடம் | தடாகங்களாலே |
| சூழ்ந்து | சூழப்பட்டு |
| அழகாய | அழகிதாயிருந்துள்ள |
| கச்சி | கச்சிநகரிலே |
| பல்லவன்என்று | பல்லவனென்றும் |
| வில்லவன்என்று | வில்லவன்என்றும் |
| பலராய் | அநேகராய் [சாண் |
| உலகில் | இந்தப்பூமியை அ |
| பலவேந்தர் | பலராஜாக்கள் |
| வணங்கு | வணங்குகிற [ |
| கழல் | வீரக்கழலையுடைய |
| மல்லையர் | மல்லாபுரியென்னு திருக்கடல் மல்லையிலுள்ளவர்களு |
| கோன் | அர்சுனன் [ |
| பல்லவன் | பல்லவனென்பவன் |
| பணிந்த | ஆஶ்ரயித்த |
| பரமேச்சுரவிண்ணகரம் | பரமேஶ்வரவிண்ணகரமாம். ( |

வ்யா.—முதற்பாட்டு. (சொல்லு) †ப்ரத்யக்ஷாதிகளுக்கு அவிஷயமான அர்த்தத்தையும் சொல்லக் கடவதான சப்தம். (வன்சொல்) இது தன்னிலும் நித்யமான வேதம். (பொருள்) துரவகாஹமான வேதார்த்தம். (தானவையாய்) அவற்றுக்கு நிர்வாஹகனாய். (சுவையித்யாதி) அதிற்சொல்லுகிற புருஷார்த்தங்களில் ஐஶ்வர்யத்தை அபேக்ஷித்திருப்பார்க்கு உபாதேயமான சப்தாதிகளுக்கும் நிர்வாஹகனாய். (சுவையித்யாதி) ரஸம், ஸ்பர்சம், சப்தம், கந்தம், சக்ஷுர் விஷயமான ரூபம்.

(நல்லரனித்யாதி) † முமுக்ஷுக்களுக்கு உபாஸ்ய வஸ்துவான ஜகஜ்ஜந்மாதிஹேதுவும் தானே யென்கிறது. (நல்லரன்) †தந்தாம் கர்மத்தாலே க்லேசப்படுகிற ப்ராணிகளைத், தீம்பிலே கைவளர்ந்த ப்ரஜையைக் காலிலுங் கழுத்திலும் விலங்கிட்டு வைக்கும் பித்ராதிகளைப்போலே, இவற்றுக்கு ஹிதரூபமாக உபஸம்ஹாரத்தைப் பண்

னும் ருத்ரனுக்கு அந்தர்யாமியாயும்,§ †ஸ்வேநரூபேண நின்று பால
க்தைப்பண்ணியும், (க) "த்வமாவிஶ்யப்ரஜாபதே - த்வாமாவிஶ்யப்ரஜா
தே" என்கிறபடியே ப்ரஜாபதிக்கு அந்தர்யாமியாய் நின்று ஸ்ருஷ்
த்தும் போருகிற †ஸர்வேஶ்வரனுக்கு வாஸஸ்த்தாநமாகிறது.

(தடமித்யாதி) நல்ல நீர்நிலம் சூழ்ந்து அழகிதாயிருக்கிற கச்
யில். (பல்லவன்) பல்லவனென்றும் வில்லவனென்றும் சிலராஜாக்க
ண்டாயிற்று அக்காலத்திலே; அவர்களும் அவர்களைச் சேர்ந்தவர்
ளு மடைய வணங்கும் கழலையுடையனாயிருக்கு மாயிற்று அவன்.
ல்லையரித்யாதி) திருக்கடல் மல்லையாயிற்றுப் படைவீடு; அவனுஶ்
பிக்கிற பரமேஶ்வரவிண்ணகரம். ... ... ... (க)

---

அரு.—முதற்பாட்டு. (சொல்லித்யாதி) ஸ்ம்ருதீதிஹாஸபுராணங்களை
ட்கொண்டருளிச்செய்கிறார் (ப்ரத்யக்ஷாதிகளுக்கித்யாதி).
புபுக்ஷூபாஸ்யத்வம் சொன்னதாய், மேல்முமுக்ஷூபாஸ்யத்வம் சொ
லுகிறதாக உட்கருத்தருளிச்செய்கிறார் (முமுக்ஷுக்களுக்குமித்யாதி). ஸம்
ர்த்தாவுக்கு நன்மையேதென்ன வருளிச்செய்கிறார் (தந்தாமித்யாதி).
ம்ஹர்த்தாவையும் ஸ்ரஷ்டாவையும் சொன்னபோதே நடுவே பாலநகர்த்
வையும் சொல்லவேண்டுமென்றருளிச்செய்கிறார் (ஸ்வேநேத்யாதி). நார
ணபதார்த்தம் (ஸர்வேஶ்வரனுக்கு) என்றது. "இடந்தான் பரமேச்சுரவிண்
கரமதுவே" என்று அந்வயம். ... ... ... ... ... (க)

மூ.—கார்மன்னு நீள்விசும்பும் கடலும்
சுடரும் நிலனும் மலையும் தன்னுந்தித்
தார்மன்னு தாமரைக் கண்ணனிடம்
தடமாமதிள் சூழ்ந்தழகாயகச்சி
தேர்மன்னு தென்னவனை முனையில்
செருவில் திறல்வாட்டிய திண்சிலையோன்
பார்மன்னு பல்லவர்கோன் பணிந்த
பரமேச்சுர விண்ணகர மதுவே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ர்மன்னு | மேகங்கள் பொருந்தி | தன்உந்தித்தார் | தன்திருநாபியில்தாம |
| ீள்விசும்பும் | பெரியஆகாசமும் [ய | | ரைப்பூவிலே [ற |
| டலும் | ஸமுத்ரங்களும் | மன்னு | உண்டாம்படியிருக்கி |
| டரும் | சந்த்ரஸூர்யர்களும் | தாமரைக்கண்ணன் | புண்டரீகாக்ஷனுக்கு |
| லனும் | பூமியும் | | |
| லையும் | குலபர்வதங்களும் | இடம் | வாஸஸ்த்தாநமாவது, |

§ (பா) பாசுரத்தில் பாடாந்தரானுகுணமாக இவ்வாக்யம் "ஸ்ருஷ்டிக்
ம்" என்றவநந்தரம் சில ஸ்ரீகோசங்களில் காண்கிறது.

(க)

| | | | |
|---|---|---|---|
| தடம் | தடாகங்களாலும் | வாட்டிய | அழித்த |
| மா | உயர்ந்திருந்துள்ள | திண் | த்ருடமான |
| மதிள் | ப்ராகாரங்களாலும் | சிலையோன் | வில்லையுடையனாய் |
| சூழ்ந்து | சூழப்பட்டு | பார் | (தன்வீரஸ்ரீயை) பூமியில் |
| அழகாய | அழகிதாயிருந்துள்ள | | |
| கச்சி | கச்சிநகரிலே, | மன்னு | நிலைநிற்கச்செய்த |
| தேர்மன்னு | மஹாரதனான | பல்லவர்கோன் | பல்லவராஜாவானவன் |
| தென்னவனை | பாண்டியனை | | |
| செருவில்முனையில் | யுத்தமுகத்தில் | பணிந்த | பரமேச்சுரவிண்ணகரமதுவே. (உ |
| திறல் | மிடுக்கை | | |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (காரித்யாதி) †சக்ரவர்த்தித் திருமகன் ராவணவதம் பண்ணினத்தோடு, இவன் சத்ருவதம் பண்ணினத்தோடு வாசியற்றிருக்கிறதாயிற்று இவருடைய ஆதரம். (காரித்யாதி) மேகங்கள் ஸஞ்சரிக்கிற ஆகாசமும், அவ்வாகாசவர்த்திகளான சந்த்ரஸூர்யர்களும், பூமியைச் சூழ்ந்தகடலும், அதால் சூட்பட்டபூமியும், அதுக்கு ஆணியடித்தாற்போலே யிருக்கிற மலைகளும், இவையடையத் †திருநாபீகமலத்திலே யுண்டாம்படியிருக்கிற புண்டரீகாக்ஷனுக்கு வாஸஸ்தாநம்.

தடாகங்களாலும் மதிள்களாலும் சூழ்ந்து தர்சநீயமான கச்சியில். (தேரித்யாதி) மஹாரதனாய்த்தேரிலே ஏறிப்போகக் கடவனாயிருக்கிற பாண்ட்யனை. (செருவில்) யுத்தத்தில். (முனையில்) தூசித்தலையிலே, மிடுக்கையழித்த திண்ணிய வில்வலியையுடையவன். (பாரித்யாதி) தானில்லையானலும் தன்னுடைய வீரஸ்ரீ நிற்கும்படி வாழ்ந்தவன். ... ... ... ... (உ

அரு.—இரண்டாம்பாட்டு. (காரித்யாதி) கீழ்ப்பாட்டில் - "நல்லரன் நாரணன்நான்முகன்" என்று - ஸம்ஹர்த்தாவுக்கும் அந்தர்யாமியாய், பாலன தர்மம் தானேநடத்தி ஸ்ரஷ்ட்டாவுக்கும் அந்தர்யாமியாயிருக்கும்படியை யருளிச்செய்தாரிறே; அதில், நான்முகனுக்குங்கூட ஸ்ரஷ்டாவாகையாலே வந்தவவனுடைய ஸ்ரஷ்ட்ருத்வத்தை முந்துற இப்பாட்டிலே யருளிச்செய்கிருரென்று ஸங்கதி.

உகந்தருளின நிலத்துக்கநுகூலித்தானகையால் அவனுடையவிஜயமும் உத்தேஶ்யமாயிற்றென்கிருர் (சக்ரவர்த்தித்திருமகனித்யாதி), "உந்தித்தார்" என்றதினர்த்தம் (திருநாபீகமலத்திலே) என்றது. ... ... ... (உ

மூ.—உரந்தருமெல்லணைப் பள்ளிகொண்டா
னொருகால்முன்னம் மாவுருவாய்க்கடலுள்
வரந்தரு மா மணிவண்ணனிடம்
மணி மாடங்கள் சூழ்ந்தழகாயகச்சி

நிரந்தவர் மண்ணையில் புண்ணுகர்வேல்
நெடுவாயிலுகச் செருவில் முனநாள்
பரந்தவன் பல்லவர்கோன்பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ன்னம்ஒருகா | முன்பொருநாளிலே | மணி | ரத்நமயமான |
| ல் | [வோடே | மாடங்கள்சூழ்ந்து | மாடங்களால்சூழப்பட்டு [ல், |
| உருவாய் | விலக்ஷணமானவடி | அழகாயகச்சி | அழகிதான கச்சிநகரி |
| -ஆள் | திருப்பாற்கடலிலே | மண்ணையில் | மண்ணையென்னும்படைவீட்டிலுள்ள |
| ம்தரும் | பலத்தையுடைய | நிரந்தவர் | சத்ருக்களுடைய |
| ல் | ம்ருதுவான [மேலே | புன் | மாம்ஸத்தை |
| ண | திருவனந்தாழ்வான் | நுகர் | புஜிக்கிற |
| ரிகொண் | கண்வளர்ந்தருளினவனுய் | வேல் | வேலின் |
| ம்தரும் | (எல்லாருடைய) அபேக்ஷிதங்களையும் தலைக்கட்டிக்கொடுக்கிற | நெடுவாயில் | பெரியவாயிலே |
| | | உக | (அவர்கள்) முடியும்படியாக |
| | | முனநாள் | முன்பு |
| மணி | சிந்தாமணிபோன்ற | செருவில் | யுத்தத்தில் |
| ன்ணன் | ஸ்வபாவத்தையுடையவனுக்கு | பரந்தவன் | வ்யாபித்தவனை |
| -ம் | வாஸஸ்த்தாநமாவது, | பல்லவர்கோன்பணிந்த பரமேச்சுரவிண்ணகரமதுவே. (௩) | |

வ்யா.—மூன்றும்பாட்டு. (உரமித்யாதி) (க) †"ப்ரக்ருஷ்டவிஜ்ஞாநபலைகதாமநி-ப்ரக்ருஷ்ட விஜ்ஞாநபலைகதாமநி" என்கிறபடியே பிராட்டிரும் தானுங்கூட ஏறித்துகையாநின்றால் பொறுக்கைக்கீடான ரணஸாமர்த்யத்தையும், வேண்டின இடங்களிலே திருவுள்ளக்கருத்தறிந்து † குழைந்துகொடுக்கைக்கீடான மென்மையையுமுடைய திருவனந்தாழ்வான் மேலே, முன்பொருநாளிலே ஶ்லாக்யமான வடிவையுடையனுய்க்கொண்டு கடலிலே கண்வளர்ந்தருளினன். (வரந்த்யாதி) † அருளாளப் பெருமாளாய் நின்று ஸர்வாபேக்ஷிதங்களை தருகிறவனுக்கு வாஸஸ்த்தாநம்.

ரத்நமயமான மாடங்கள் சூழ்ந்த தர்சநீயமாயிருக்கிற கச்சியில். (நிரந்தித்யாதி) "மண்ணை" என்று ஆற்றுக்கும், படைவீட்டுக்கும் பேர்; "திருச்சிற்றாறு" என்று ஆற்றுக்கும் திருப்பதிக்கும் பேராகிறுப்போலே. அப்படைவீட்டிலுண்டான, நிரந்தவருண்டு-சத்ருக்கள், அவர்களுடைய, புண்ணுண்டு-மாம்ஸம், அத்தை நுகர

(க) ஸ்தோ - ப - ௩௧.

க்கடவதாய் - புஜிக்கக்கடவதாயிருக்கிற வேலினுடைய பெ
வாயிலே அந்தசத்ருக்கள், உக - அவர்கள் முடிய. திருமங்
யாழ்வார் மதிக்கும்படியான ஆண்பிள்ளைத்தனமிறே அவரதும். (
†"கடமாகளியானை வல்லான்" என்றும், (உ) "ஆடல்மாவலவ
என்றும், (ங) "மருவலர்தமுடல் துணிய வாள்வீசும் பரகாலன்
என்றும் †துறைதோறும் தலையாயிருக்கிற திருமங்கையாழ்வாரி
மதிக்கிறார். (ச) †*ரஞ்ஜநீயஸ்ய போலேயிருக்கிறதிறே. (செரு
வித்யாதி) இவன் யுத்தத்திலே சத்ருக்களடங்கலும் அழிந்து தா
யாம்படி விஸ்த்ருதனானவன். ... ... ... (

அரு.—மூன்றாம்பாட்டு. (உரமித்யாதி)முதற்பாட்டில் ஆர்த்த ரக்ஷ)ம
பாலநதர்மத்தை, திருப்பாற்கடலில் கண்வளர்ந்தும், ஹஸ்திகிரியில் அரு
ளராயும் நடத்தினபடியை யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

உரத்தை - பலத்தை, தரும் - உடையவனென்று லக்ஷணயா சப்தா
தம் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார், (ப்ரக்ருஷ்டேத்யாதி). (குழை
கொடுக்கை) என்றது - திருமுடிபக்க முயர்ந்து கொடுக்கையும், மற்றையி
தாழ்ந்து கொடுக்கையும். [கடலிலே திருவநந்தாழ்வான் மேலே - க
வளர்ந்தருளினான்] என்றந்வயித்து, இதுக்கீடாக மூலத்தையும் அந்வயித்
கொள்வது. வரந்தருமவனாய் - (ரு) "వరదస్సర్వభూతానామద్యాపిపరిదృశ్య
வரதஸ்ஸர்வ பூதாநாமத்யாபி பரித்ருஶ்யதே" என்கிறவரதனாய், மாமண
சிந்தாமணிபோலே ஸர்வாபேக்ஷிதங்களையும் தருகையே ஸ்வபாவமாக வுடை
யவனென்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (அருளா
பெருமாளாயித்யாதி). அருளாளப் பெருமாளென்று - தேப்பெருமாளுக
ப்ரஸித்தமான திருநாமமிறே. எம்பெருமானார், யஜ்ஞமூர்த்திக்கு, அரு
ளப் பெருமாளென்று தேப்பெருமாளுடைய திருநாமம் சாத்திற்றும் ப்ரஸி
மிறே.

"திருமங்கையாழ்வார் வீரரென்று ப்ரஸித்தர், என்கைக்கு ஸம்வா
காட்டுகிறார் (கடமாவித்யாதி). (துறைதோறும்) என்றது - ஆனையாளுகை
யும், குதிரை நடத்துகையும், வாள்வீசுகையுமாகிற துறைதோறுமென்றப
தாம் வீரசிகாமணியாயிருந்து, ஒருவன் வீரத்தைக்கொண்டாடக் கூடுமோ
வென்ன வருளிச்செய்கிறார் (ரஞ்ஜநீயஸ்யேத்யாதி). இத்தால் - சத்ருவா
வீரனாயிருந்த ராவணன் பெருமாளைக் கொண்டாடினால், அநுகூலன் வி
யத்திலே கேட்கவேணுமோ வென்றதாயிற்று. ... ... (

(க) உ - ச - கo. (ச) ரா - யு -
(உ) ரு - அ - கo. (ரு) ஹஸ்திகிரிமாஹாத்ம்யம்.
(ங) ங - கூ - கo.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| முன்று | இந்த்ரன் ராஜ்யத்தை இழந்தவன்று | நீங்குதும் | போக்குவோம் [பீர்! |
| ...ரு | அளக்கவரிதான | என்னநிற்பீர் | என்றுசொல்லியிருப் |
| ...ர்நிலம் | மஹாப்ருதிவியை | கருமா | கறுத்துப்பெரியதான |
| ...ளப்பான் | அளக்கைக்காக | கடலுள் | திருப்பாற்கடலிலே |
| ...றளாய் | வாமநரூபியாய் | கவைநா | இரண்டுநாவையுடைய |
| ...வுணன் | அஸுரனுன மஹாபலியினுடைய | அரவினணைப்பள்ளியின்மேல் | திருவனந்தாழ்வானுகிற படுக்கையிலே |
| ...பருவேள்வியில் | மஹாயாகத்தில் | உவந்து | உகந்து [ள |
| | | கிடந்தான் | பள்ளிகொண்டருளி |
| ...சன்றுஇரந்த | சென்றுஅர்த்தித்த | திருமால் | ஶ்ரியஃபதி |
| ...பருமான் | ஸர்வேஶ்வரனுடைய | திருமங்கையோடு | பெரியபிராட்டியாரோடே |
| ...ருநாமம் | திருநாமத்தை [லி | ஆடு | நித்யவாஸம்பண்ணுகிற |
| ...தற்றி | அடைவுகெடச்சொல் | | |
| ...ந்தம் | உங்களுடைய | | |
| ...றவித்துயர் | ஜந்மதுஃகத்தை | | |

தில்லைத்திருச்சித்திரகூடம் சென்று சேர்மின்கள். (௪)

வ்யா.—நாலாம்பாட்டு. (அருமாவித்யாதி) அளக்கவரிதான ...ஹாப்ருதிவியை அளக்கைக்காக வாமநனாய், அஸுரனுடைய ...ஹாயாகத்திலே சென்றர்த்தித்த ஸர்வேஶ்வரனுடைய திருநாமத் ...த அடைவுகெடப்பேசி உங்களுடைய ஜந்மதுஃகத்தைப்போக்கு ...வாமென்று சொல்லியிருப்பீர்!

(கருமாவென்றுதுடங்கி)இரண்டு நாவையுடைய திருவநந்தாழ் ...ானுகிற படுக்கையிலே, † கறுத்துப் பெருத்த கடலிலே உகந்து ...ண்வளர்ந்தருளின ஶ்ரியஃபதி பெரியபிராட்டியாரோடேகூடவிடா ...த ஸஞ்சரிக்கிற தில்லை. ... ... ... ... ...(௪)

அரு.—நாலாம்பாட்டு. (அருமாவித்யாதி). ஸ்ரீ பூமிப்பிராட்டிக்கு அவன் ...ரமப்ரணயியாகையாலுதவினனேயாகிலும், அதுகொண்டு நாங்கள் தேறும் ...ட யெங்ஙனேயென்ன; தன்னை அர்த்தித்தார்க்காகவே தானர்த்தியாய்க் ...ர்யம்செய்து தலைக்கட்டினவனன்றோ, உங்களபேக்ஷிதமும், செய்வ ...னன்றருளிச்செய்கிறரென்று ஸங்கதி.

"கடல்கள்தோறும் கண்வளர்ந்தருளுமென்றொரு ப்ரமாணப்ரஸித்தி ...ண்டு" என்று முன்னே தாம் நிர்வஹித்தநிர்வாஹத்தைத் திருவுள்ளம்பற்றி ...ருளிச்செய்கிறார் (கறுத்துப்பெருத்தகடலிலே) என்று. ... (௪)

மூ.—கோமங்க வங்கக் கடல் வையமுய்யக்
குலமன்ன ரங்கம் மழுவில் துணியத்
தாமங்கமருள் படைதொட்ட வென்றித்
தவமா முனியைத் தமக்காக்ககிற்பீர்

பூமங்கை தங்கிப் புலமங்கை மன்னிப்
புகழ் மங்கையெங்கும் திகழப் புகழ்சேர்
சேமங்கொள் பைம் பூம் பொழில் சூழ்ந்த தில்லைத்
திருச்சித்திரகூடம் சென்றுசேர் மின்களே. (ரு

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கோ | ராஜாக்கள் | ஆக்ககிற்பீர் | ஆக்கிக்கொள்ளவேண்டியிருப்பீர் ! |
| மங்க | நசிக்கவும் [ந்த) | | |
| வங்கம் | மரக்கலங்கள் (நிறை | பூமங்கை | பெரியபிராட்டியார் |
| கடல் | கடல்சூழ்ந்த | தங்கி | (திருமார்விலே) தங்கியும் |
| வையம் | பூமியிலுள்ளார்[கவும் | | |
| உய்ய | உஜ்ஜீவிக்கும்படியா | புலமங்கை | ஸ்ரீபூமிப்பிராட்டி |
| குலமன்னர் | ராஜாக்களுடைய | மன்னி | (இடவருகே) பொருந்தியும்(அத்தாலே |
| அங்கம் | சரீரமானது | | |
| மழுவில் | மழுவிலே | புகழ் | கீர்த்தியாகிற |
| துணிய | துணியும்படியாகவும் | மங்கை | ஸ்த்ரீ |
| தாம் | தாமே | எங்கும் | எங்குமொக்க |
| அங்கு | அப்போதுண்டான | திகழ | உஜ்ஜ்வலமாய்விளங்காநிற்க |
| அமருள் | பூசலிலேபுக்கு | | |
| படைதொட்ட | ஆயுதமெடுத்த [ய் | புகழ்சேர் | புகழையுடைத்தாய் |
| வென்றி | ஜயத்தையுடையவனை | சேமங்கொள் | அரணையுடைத்தான |
| தவம் | பின்பு தபஸ்ஸுபண்ணப்புக்க | பைம்பூம்பொழில்சூழ்ந்த | பரந்துபூத்தசோலையால்சூழப்பட்ட |
| மாமுனியை | மஹாமுனியான ஸ்ரீ பரசுராமாழ்வானை | தில்லைத்திருச்சித்திரகூடம்சென்று சேர்மின்கள். (ரு | |
| தமக்கு | தந்தாமுக்கு | | |

வ்யா—அஞ்சாம்பாட்டு. (கோமங்கவித்யாதி) ராஜாக்களென்று பேர்பெற்றாரடங்கலும் மங்க, கடல்சூழ்ந்தபூமி உய்ய, ராஜாக்களுடையசரீரம் மழுவிலே துணித்தவிடத்திலும் †கோபம்மாறாதே ஆயுதம்தொட்ட அதிமாத்ரமான மஹாவீர்யத்தையுடையனை ஸ்ரீபரசுராமாழ்வானைத்தந்தாமுக்காக்கிக்கொள்ளவேண்டியிருப்பீர்!

(பூமங்கையித்யாதி) பெரியபிராட்டியாரும், ஸ்ரீபூமிப்பிராட்டியாரும், நித்யவாஸம்பண்ணி புகழ் மங்கை யெங்கு முஜ்ஜ்வலமாய் வர்த்திப்பதும் செய்து, புகழையும் காப்பையுமுடைய பொழில் சூழ்ந்த தில்லை. ... ... ... ... ... ... (ரு)

---

அரு.—அஞ்சாம்பாட்டு. (கோமங்கவித்யாதி) இந்த்ரனுக்கு விரோதியாய் உதாரனான மஹாபலிபோலேயோ எங்களுடைய ப்ரபலவிரோதிகள் என்னும் ஜிஜ்ஞாஸுக்களுக்கு விரோதிநிரஸநசீலதையை யருளிச்செய்யக்கோலி வாமநாவதாரத்துக்கு அநந்தரபாவியான ஸ்ரீபரசுராமாழ்வான் வீரசரிதத்தை யருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

மழுவில் துணித்தபின்பும் படைதொட்டிருக்கையால் பலித்தவர்த்தம் கோபம்மாருதே) என்று. ... ... ... ... (௫)

மூ.—நெய் வாயழ லம்பு துரந்து முந்நீர்
துணியப் பணிகொண் டணியார்ந் திலங்கும்
மையார் மணிவண்ணனை யெண்ணி நுந்தம்
மனத்தே யிருத்தும்படி வாழவல்லீர்
அவ்வாயிளமங்கையர் பேசவுந்தா
னரு மாமறை யந்தணர் சிந்தை புகச்
செவ்வாய்க்கிளி நான்மறை பாடும் தில்லைத்
திருச்சித்திரகூடம் சென்று சேர்மின்களே. (௬)

| பதம். | உரை. |
|---|---|
| நெய் | கூரிய |
| வாய் | வாயையும் |
| அழல் | அக்நிபோன்றதேஜஸ்ஸையுமுடைய |
| அம்பு | அம்பை |
| துரந்து | விட்டு |
| முந்நீர் துணிய | கடலைவற்றச்செய்து |
| பணிகொண்டு | (அதில்) அணைகட்டினவனாய் |
| அணி | ஆபரணத்தாலே |
| ஆர்ந்து | பூர்ணமாய் |
| இலங்கும் | விளங்காநிற்பதாய் |
| மை ஆர் | கருமைமிக்க |
| மணிவண்ணனை | மணிபோன்றவடிவழகையுடையவனை |
| எண்ணி | அநுஸந்தித்து |
| நுந்தம் | உங்களுடைய |
| மனத்தே | நெஞ்சிலே [படி |
| இருத்தும்படி | நித்யவாஸம்பண்ணும் |
| வாழவல்லீர் | வாழவேண்டியிருப்பீ[ர்! |
| அவ்வாய் | அவ்விடத்தில் |
| இளமங்கையர் | சிறுபெண்கள் (தமப்பன்மார் அத்யயநம் பண்ணக்கேட்டிருக்கையாலே,) |
| அருமாமறை | அர்த்தமறிய அருமையான பெரியவேதத்தை |
| பேசவும் | சொல்லவும், (அப்பெண்களுடனேகூட) |
| செவ்வாய்க்கிளி | சிவந்தவாயையுடையகிளிகள் |
| அந்தணர்சிந்தைபுக | ப்ராஹ்மணர் ஹ்ருதயத்திலேபுகும்படி |
| நால்மறை | நான்குவேதங்களையு[ம் |
| பாடு | பாடுகிற |
| தில்லைத்திருச்சித்திரகூடம் சென்று சேர்மின்கள். | (௬) |

வ்யா.—ஆறும்பாட்டு. (நெய்வாயித்யாதி) கடைந்து நெய்பிட்ட வாயையுடைத்தாய், நெருப்பையுமிழுகிற அம்பையேவிக் கடலைத் துணித்து, அத்தைப்பணிகொண்டு, †உஜ்ஜ்வலமாய் கருமைமிக்கிருந்துள்ள மணிபோலேயிருக்கிற திருநிறத்தோடே கூடின விக்ரஹத்தை யுடையவனை யநுஸந்தித்து, உங்களுடைய ஹ்ருதயத்திலே நித்யவாஸம்பண்ணும்படி வாழவல்லீர்!.

(அவ்வாயென்று துடங்கி)† தன்வாயில் பழுப்புப்போலே யிருக்கிற பாலை(௯௰)களானபெண்கள் ஓத்துக்கேட்ட செவியேற்றாலே சொல்லவும் ப்ராஹ்மணருடைய ஹ்ருதயத்துக்கேற, சிவந்தவாயை

யுடைத்தான கிளியானது நல்ல ஸ்வரத்தோடே நாலுவேதத்தைய பாடாநின்றுள்ள தில்லை. ... ... ... (

அரு.—அரும்பாட்டு. (நெய்வாயித்யாதி) லோகத்தில் எதிரிட்ட ரா க்களைவென்றாகிலும் எங்களுடைய அபாரஸம்ஸாரஸமுத்ரத்தை வெல்லவல் ஞேவென்ன; அநந்தராவதாரத்தில் கடலைக்கலக்கின அதிமாநுஷசேஷ் தத்தையருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

அணி - ஆபரணமாய், அத்தாலே ஆர்ந்து - பூர்ணமாய், இலங்குமதா ன்று விக்ரஹவிசேஷணமென்று திருவுள்ளம்பற்றியருளிச்செய்கிறார் (உஜ் வலமாய்) என்று.

“அவ்வாயிளமங்கையர் - அருமாமறை - பேசவும் அந்தணர்சிந்தைபு செவ்வாய்க்கிளி-தான்-நான்மறைபாடு” என்றந்வயம் திருவுள்ளம்பற்றித் தா பர்யமருளிச்செய்கிறார் (தன்னித்யாதி). ... ... ... ... (

மூ—மௌவல் குழலாய்ச்சி மென்தோள்நயந்து
மகரம்சுழலச் சுழல் நீர்பயந்த
தெய்வத் திருமாமலர் மங்கை தங்கு
திருமார்பனைச் சிந்தையுள் வைத்துமென்பீர்
கௌவைக்களிற்றின் மருப்பும் பொருப்பில்
கமழ் சந்து முந்தி நிவா வலங்கொள்
தெய்வப்புனல்சூழ்ந் தழகாய தில்லைத்
திருச்சித்திரகூடம் சென்றுசேர்மின்களே. (

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மௌவல் | முல்லைமலரை [ய | வைத்தும் என் பீர் | வைக்கவேண்டியி ப்பீர் !, (ஸிம்ஹ தோடேபிணங்கு கையாலே) |
| குழல் | திருக்குழலிலேயுடை | | |
| ஆய்ச்சி | நப்பின்னைப்பிராட்டி | | |
| மெல் | ம்ருதுவான [யுடைய | கௌவை | பிளிறுகிற |
| தோள் | திருத்தோளோடே | களிற்றின் | யானையின் |
| நயந்து | கலந்து, [மானவை | மருப்பும் | கொம்பையும் |
| மகரம் | மத்ஸ்யம்தொடக்க | பொருப்பில் | பர்வதத்தில் |
| சுழல | சுழலும்படி | கமழ் | நறுநாற்றம்கமழ்கிற |
| சுழல் | சுழன்றுவருகிற | சந்தும் | சந்தநத்தையும் |
| நீர்பயந்த | கடல்பெற்ற | உந்தி | தள்ளிக்கொண்டுவ |
| தெய்வம் | அழகிய | நிவா | வெள்ளாறு [கி |
| திருமாமலர்மங் கை | பெரியபிராட்டியார் | வலங்கொள் | வலங்கொள்ளாநிற் |
| | | தெய்வம் | அழகிய [ |
| தங்கு | தங்குகிற | புனல்சூழ்ந்து | ஜலம்சூழ்ந்து |
| திருமார்பனை | திருமார்வையுடைய | அழகாய | தர்சநீயமான |
| சிந்தையுள் | நெஞ்சில் [வினை | தில்லைத்திருச்சித்திரகூடம்சென்று சேர்மின்கள். | (எ |

வ்யா.—ஏழாம்பாட்டு. (மௌவலித்யாதி) †மௌவலோடேகூடின திருக்குழலையுடைய நப்பின்னைப் பிராட்டியினுடைய ம்ருதுவான திருத்தோளிலேகலந்து, † அங்குண்டான மத்ஸ்யங்கள் சுழலும்படி சுழன்றுவருகிற கடல் பெற்ற பெரியபிராட்டியார்தங்கும் திருமார்வையுடையவனை ஹ்ருதயத்திலே வைத்துக்கொள்வோமென்பீர்!.

(கௌவையித்யாதி) ஸிம்ஹத்தோடு பிணங்கிப்†பிளிறுகிற ஆனையினுடைய கொம்பும், மலையில் பரிமளிதமான சந்தநத்தையும் தள்ளிவா என்கிற ஆறு வலங்கொள்ளாநிற்கிற விலக்ஷணமான புனல் சூழ்ந்து தர்சநீயமான தில்லை. ... ... ... (௭)

அரு.—ஏழாம்பாட்டு. (மௌவலித்யாதி). "ஸம்ஸாரஸமுத்ரத்தைக் கலக்கவல்லவன் வந்திருக்கிறதேசத்தில், சென்று சேர்மின்கள்" என்றுநின்றீர், எங்களால் கிட்டப்போமோவென்ன; புருஷகாரபூதர் அருகேயுண்டு, நிற்காலியாதேசென்று சேருங்கோளென்கிறாரென்று ஸங்கதி.

(மௌவலோடே) என்றது - முல்லைமலரோடே என்றபடி. (அங்குண்டான) என்றது - மேலேசொல்லப்படுகிற ஸமுத்ரத்திலுண்டான என்றபடி. கௌவை - ஆரவாரமாய், (பிளிறுகிற) என்றருளிச்செய்கிறார். ... (௭)

மூ.—மாவாயினங்கம் மதியாது கீறி
மழை மாமுது குன்றெடுத்தாயர்தங்கள்
கோவாய் நிரைமேய்த்துலகுண்டமாயன்
குரை மா கழல் கூடும் குறிப்புடையீர்
மூவாயிர நான்மறையாளர்நாளும்
முறையால் வணங்க வணங்காயசோதித்
தேவாதிதேவன் திகழ்கின்ற தில்லைத்
திருச்சித்திரகூடம் சென்றுசேர்மின்களே. (௮)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ாவின் | கேசிஎன்னும்குதிரை [யின் | எடுத்து | குடையாகஎடுத்து |
| ாய் | வாயையும் | ஆயர்தங்கள் கோவாய் | இடையர்க்குத் தலைவனாய் |
| ுங்கம் | உடலையும் [தே | நிரை | பசுத்திரளை |
| ாதியாது | ஒருசரக்காக நினையா | மேய்த்து | மேய்த்து, (ப்ரளயாபத்திலே) |
| ீறி | பிளந்துபொகட்டு, (இந்த்ரன் வர்ஷிப்பித்த) | உலகு | லோகத்தை [த |
| ழை | கல்வர்ஷத்துக்கு | உண்ட | திருவயிற்றிலேவைத் |
| ா | பெரிதாய் | மாயன் | ஆஸ்சர்யபூதனுடைய |
| ுது | பழையதான | குரை | ஆபரணங்களால்சப்திக்கிற |
| ுன்று | கோவர்த்தநமென்னும்மலையை | மா | பெருமைதங்கிய |

| | | | |
|---|---|---|---|
| கழல் | திருவடிகளை [ம் | வணங்க | ஆஸ்ரயிக்க |
| கூடும் | சேரவேணுமென்னு | அணங்காய | அப்ராக்ருதமான |
| குறிப்புடையீர் | நினைவையுடையீர்! | சோதி | தேஜஸ்ஸையுடைய |
| மூவாயிரம் | மூவாயிரரான | தேவாதிதேவன் | ஸர்வேஸ்வரன் |
| நான்மறையாளர் | ப்ராஹ்மணர் | திகழ்கின்ற | விளங்குகின்ற |
| நாளும் | நாள்தோறும் [கபடி | தில்லைத்திருச்சித்திரகூடம்சென்று சேர்மின்கள். | (அ |
| முறையால் | ஸ்வரூபத்துக்குத்தக் | | |

வ்யா.—எட்டாம்பாட்டு. (மாவாயித்யாதி) கேசியுடைய வாயோடே கூடஉடம்பை அநாயாஸேந இரண்டாகக்கிழித்து, இந்த்ரனால்வந்த மழையிலே, பெருத்துப்பழைதான கோவர்த்தநத்தையெடுத்து ஆயர்தலைவனாய்ப் பசுமேய்த்து, லோகத்தைத் திருவயிற்றிலே வைத்த ஆஸ்சர்யபூதனுடைய, ஆபரண ஒலியை யுடைத்தாய் போக்யதைமிக்க திருவடிகளைக்கூடவேணுமென்று குறிப்புடையீர்!

(முறையால் வணங்க அணங்காயசோதி) சாஸ்த்ரங்களில் சொல்லுகிறபடியே ஆஸ்ரயிக்க, அவர்களுக்காஸ்ரயணீயனாய் † தேஜஸ்ஸையுடைய ஸர்வேஸ்வரன். ... ... ... ...(அ)

---

அரு.—எட்டாம்பாட்டு. (மாவாயித்யாதி) கீழ்ப்பாட்டிற்சொன்ன புருஷகாரபூதரை முன்னிட்டாஸ்ரயித்தார்க்கு, விரோதி பாபங்களைப்போக்கி துக்கவர்ஷத்தை நீக்கித்தன்வயிற்றிலேவைத்து நோக்கவல்லனென்னுமதுக்கு த்ருஷ்டாந்தமான அபதாநங்களை ஸூசிப்பித்து அவனிருக்கும் தேசத்திலே செல்லுங்கோளென்கிறாரென்று ஸங்கதி.

அணங்காய - அப்ராக்ருதமான, சோதி என்றாய், அத்தையருளிச்செய்கிறார் (தேஜஸ்ஸையுடைய) என்று. ... ... ... ... (எ)

மூ.—செரு நீல வேற்கண் மடவார்திறத்துச்
சினத்தோடு நின்று மனத்தால்வளர்க்கும்
அரு நீல பாவ மகலப் புகழ்சே
ரமரர்க்குமெய்தாதவண்டத் திருப்பீர்
பெருநீர்நிவாவுந்தி முத்தங்கொணர்ந்தெங்கும்
வித்தும்வயலுள் கயல் பாய்ந்துகளத்
திருநீலநின்று திகழ்கின்ற தில்லைத்
திருச்சித்திரகூடம் சென்றுசேர்மின்களே. (கூ)

| பதம். | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| ௬ரு | யுத்தத்துக்குப்பரிகரமான [ய் | புகழ்சேர் | புகழையுடைய |
| வல் | வேல்போலேகூரிதா | அமரர்க்கும் | ப்ரஹ்மாதிகளுக்கும் |
| ௮ம் | நீலம்போலேகுளிர்ந்த [ராய் | எய்தாத | கிட்டவரிதான |
| ன் | கண்ணழகையுடைய | அண்டத்து | பரமபதத்தில் [பீர்! |
| ..வார்திறத்து | மடப்பத்தையுடைய ஸ்த்ரீகளிடத்தில் (புஜிக்க நினைத்த போகங்களை விலக்குவார்பக்கல்) | இருப்பீர் | இருக்கவேண்டியிருப் |
| ரத்தோடு | கோபத்தோடு | பெருநீர் | மிக்கநீரையுடைய |
| று | இருந்து | நிவா | வெள்ளாறு |
| ரத்தால் | நெஞ்சிலாசையாலே | முத்தம்கொணர்ந்து | முத்துக்களைக்கொண்டுவந்து |
| ர்க்கும் | வளர்த்துவரும்தாய் | உந்தி | தள்ளி |
| 5 | போக்கவொண்ணாத | வித்தும் | விதைக்கிற |
| ம் | தண்ணிய | வயலுளெங்கும் | வயல்தோறும் |
| வம் | பாபமானது | கயல் | கயல்மத்ஸ்யங்கள் |
| ல | போம்படி | பாய்ந்துஉகள | குதித்துத்துள்ள |
| | | திருநீலம் | அழகியநெய்தல்மலர் |
| | | நின்று | எங்குமொக்கப்பரந் |
| | | திகழ்கின்ற | விளங்குகிற [து |

தில்லைத்திருச்சித்திரகூடம்சென்று சேர்மின்கள். (௯)

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (செருவித்யாதி) யுத்தத்துக்குப் கரமாய் நீலமான நிறத்தையுடைய வேல்போலேயிருக்கிற கண்ணை டைய ஸ்த்ரீகள் திறத்தில், அதுக்கு ப்ரதிபந்தகர்பக்கல் சினத் ாடே நெஞ்சிலாசையாலே வளர்ந்து பரிஹரிக்கவொண்ணாதே ண்ணிதான பகவத்ப்ரதிபந்தகமான பாபம் போக ப்ரஸித்தரான ஹ்மாதிகளுக்கும் கிட்டவரிய பரமபதத்திலே யிருக்கவேண்டி ருப்பீர்!

(பெருநீரென்றுதுடங்கி) மிக்கநீரையுடைய நிவாஎன்கிறஆறுமுத் க்கொடுவந்து வித்துகிற வயலிலே †விக்ருதமான கயல்கள்பாய் தாவித்திரிய தர்சநீயமான நீலம் நின்று திகழாநின்றுள்ள தில்லை.

---

அரு.—ஒன்பதாம் பாட்டு. (செருவித்யாதி) தாமுபதேசித்த ஆஶ்ரய துக்கு பல(ஃல) ஸ்வரூபந்தான் ப்ராப்யாந்தரநிவ்ருத்திபூர்வக பகவத்ப்ரா என்று பல(ஃல) கௌரவத்தை நெஞ்சில் படுத்துகிறாரென்று ஸங்கதி.

"நீலம்" என்று - கறுப்பாய், அத்தால் தண்ணிமையைச்சொல்லுகிற ன்றருளிச்செய்கிறார் (தண்ணிதான) என்று.

† (விக்ருதமான) என்றது - முத்தைவித்துகையாலே கல்லிட்டெறிந் போலே பயப்பட்டிருக்கிறவென்றபடி. நீலம் - நெய்தல். ... (௯)

மூ.—சீரார்பொழில் சூழ்ந்தழகாய தில்லைத்
திருச்சித்திரகூடத் துறை செங்கண்மாலுக்
காராத உள்ளத்தவர் கேட்டுவப்ப
வலை நீ ருலகுக் கருளே புரியும்
காரார்புயற்கைக் கலிகன்றி குன்றா
வொலிமாலையோ ரொன்பதோ டொன்றும்வல்லார்
பாராருலக மளந்தா னடிக்கீழ்ப்
பலகாலம் நிற்கும்படி வாழ்வர்தாமே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சீர் ஆர் | அழகுமிக்க [டு | புயல் | மேகம்போலே |
| பொழில்சூழ்ந்து | சோலையால்சூழப்பட் | கை | உதாரரான |
| அழகாய | அழகையுடைத்தான | கலிகன்றி | ஆழ்வார் |
| தில்லைத்திருச்சித்திரகூடத்து [கிற | | குன்றா | குறையாத |
| உறை | நித்யவாஸம்பண்ணு | ஒலி | ஓசையையுடைத்தா ம்படியருளிச்செ த |
| செங்கண்மாலுக்கு | சிவந்தகண்ணழகையுடையஸர்வேஶ்வரன்விஷயமாக | மாலை | சப்த ஸந்தர்ப்பத் யுடைய |
| ஆராத | பகவதநுபவத்தில்த்ருப்திபிறவாத | ஓரொன்பதோடொன்றும் | பத்துப்பாட்டையும் |
| உள்ளத்தவர் | ஸ்நேஹத்தையுடைய ஸ்ரீவைஷ்ணவர்கள் | வல்லார் | அர்த்தத்துடன்கற்க வல்லவர்கள் |
| கேட்டு | ஶ்ரவணம்பண்ணி | | |
| உவப்ப | ஸந்தோஷிக்கும்படியாக | பார் ஆர் உலகம் | பூமியையும்ஸ்வர்க்க திலோகங்களையு |
| அலைநீர் | அலையெறிகிறஜலத்தையுடையகடலால்சூழப்பட்ட | அளந்தான் | அளந்துகொண்டவ டைய |
| | | அடிக்கீழ் | திருவடிகளிலே |
| உலகுக்கு | பூமியிலுள்ளார்க்கு | பலகாலம் | ஸர்வகாலமும் |
| அருளே | ப்ரஸாதத்தையே | நிற்கும்படிவாழ்வர் | அடிமைசெய்துவா திக்கும்படியான வாழ்வைப்பெறு ர்கள். (௧ |
| புரியும் | பண்ணும்ஸ்வபாவத்தையுடையராய் | | |
| கார் ஆர் | மிகவும்பெருத்த | | |

வ்யா.—பத்தாம்பாட்டு. (சீராரித்யாதி) அழகுமிக்க பொழி சூழ்ந்து தர்சநீயமான தில்லையில் நித்யவாஸம்பண்ணுகிற ஸர்வே வரனுக்கு, ஒருநாளும் ஆராத †ஸ்நேஹத்தையுடைய ஸ்ரீவைஷ்ண

ள்கேட்டு ஸந்தோஷிக்க, கடல்சூழ்ந்த பூமிக்கு ப்ரஸாதத்தைப்பண் றும் †ஸ்வபாவராய், கார்காலத்து மேகம்போலே பரமோதாரரான ருமங்கையாழ்வார் குறையாத வோசையையுடைத்தாக வருளிச் சய்த திருமொழி பத்தும்வல்லார், ப்ருதிவீப்ரசுரமான லோகத் த யளந்தவன் திருவடிகளின்கீழே காலமெல்லாம் வர்த்திக்கும்படி ன வாழ்வைப் பெறுவர். ... ... ... (௧௦)

பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே சரணம்.

---

அரு.—பத்தாம்பாட்டு. (சீராரித்யாதி) "உள்ளம்" என்கிறபதம் லக்ஷ யா ஸ்நேஹத்தைச்சொல்லுமென்றருளிச்செய்கிறார் (ஸ்நேஹத்தை) என் "அருளேபுரியும்" என்கிற அவதாரணலப்யார்த்தம் (ஸ்வபாவராய்) என் ு. ... ... ... ... ... ... ... ... (௧௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.

மூன்றும்பத்தில் இரண்டாந்திருமொழி முடிந்தது.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# பெரியதிருமொழி - ௩ - ம் பத்து - ௩ - ம் திருமொழி
# வாடமருதிடை ப்ரவேசம்.



வ்யா.—†க்ருஷ்ணவதாராதிகளிலிழவுதீரத் திருச்சித்ரகூட திலேவந்து ஸங்கிஹிதனானென், எல்லாருமாஸ்ரயியுங்கோளென்கிற

---

அநு.—வாடமருதிடைப்ரவேசம். கீழ்த்திருமொழியில் ராமக்ருஷ்ண விபவங்களிலபதாநங்களை யாஸ்ரயிக்கைக்குறுப்பாகச்சொல்லி, "திருச்சி த்ரகூடத்தில் சென்று சேர்மின்கள்" என்றார்; இதுகேட்டசேதநர்க்கு, வி வத்தில் நெஞ்சுசென்று அங்கே யாஸ்ரயிக்கையில் ருசிபிறந்து அது காலாத மென்று பிற்காலிக்கவும் கூடுமென்று திருவுள்ளம்பற்றி, அந்த விபவங்கள் விரோதிநிரஸநசீலதையை பஹுமுகமாக வருளிச்செய்துகொண்டு, அவனே திருச்சித்திரகூடத்துள்ளானென்று ஸம்ஸாரிகள்நெஞ்சில் படுத்துகிறானெ னும் ஸங்கதியை ஸங்க்ரஹேண ஸூசிப்பிக்கிறார் (க்ருஷ்ணவதாரேத்யாதி ஆதிசப்தத்தாலே ராமாவதாரமும் நரஸிம்ஹாவதாரமும் சொல்லுகிற



மூ—வாடமருதிடைபோகி மல்லரைக் கொன்றொக்கலித்திட்
டாடல் நன் மா வுடைத்தாய ராநிரைக்கன் றிடர்தீர்ப்பான்
கூடிய மாமழைகாத்த கூத்தனென வருகின்றான்
சேடுயர் பூம் பொழில் தில்லைச் சித்திரகூடத் துள்ளானே. (

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மருதிடை | இரண்டுமருதமரங்க ளின்நடுவே | உடைத்து | கொன்று, |
| வாட | அவைவாடியிருந்த வளவில் | அன்று | இந்த்ரன்வர்ஷிப்பி தவன்று |
| போகி | தவழ்ந்துபோய், | ஆயர் | இடையருடைய |
| மல்லரை | சாணூரமுஷ்டிகாதி மல்லவர்க்கத்தை | ஆநிரைக்கு | பசுக்கூட்டத்துக் |
| கொன்று | நிரஸித்து, | இடர் | துக்கத்தை |
| ஒக்கலித்திட்டு | நடைபழகினதாய் | தீர்ப்பான் | தீர்க்கைக்காக |
| ஆடல் | ஆடிக்கொண்டுவரும | கூடிய | திரண்ட |
| நல் | அழகிதான [தாய் | மாமழை | பெரியகல்வர்ஷத் (மலையையெடு |
| மா | குதிரைவடிவுகொண் ட கேசியை | காத்த | ரக்ஷித்த |

| | | | |
|---|---|---|---|
| -த்தன் என | மநோஹாரிசேஷ்டித த்தையுடையவன் என்று எல்லாரும் சொல்லும்படி | உயர் | ஓங்கின [டைய |
| | | பூம்பொழில் | அழகியசோலைகளையு |
| | | தில்லைச்சித்திர கூடத்து | தில்லைத்திருச்சித்ரகூடத்திலே |
| ருகின்றான் | வருமவன், | உள்ளான் | நித்யவாஸம்பண்ணு நின்றான். (க) |
| சடு | இளகிப்பதித்ததாய் | | |

வ்யா.—முதற்பாட்டு. (வாடவித்யாதி) †அஸுராவேசத்தாலே ந்த மருதாகையாலே இவன்கிட்டக்கிட்ட அவைவாட மருதின் வே போய். (மல்லரைக்கொன்று) சாணூரமுஷ்டிகரை நிரஸித்து. ஆவாலம் கொட்டி, (ஆடல்) தன் ஸஞ்சாரத்திலே இவன் அந்ய ணும்படி ஆடிக்கொண்டுவந்து தோற்றின கேசியைக்கொன்று, டையருடைய பசுநிரைக்கு அன்றிடர் தீர்க்கைக்காக, இந்த்ரன் ரரித்த புஷ்கலாவர்த்தகாதி மேகங்களெல்லாம் கூடி வர்ஷித்த ருமழையைக்காத்த மநோஹாரிசேஷ்டிதத்தையுடையவன் என் எல்லாரும் சொல்ல வருகிறவன்.—(சேடு) இளமையும், திரட் ும். ... ... ... ... ... (க)

அரு.—முதற்பாட்டு. (வாடவித்யாதி) (க)"இணைமருதிற்றுவீழ" என்னுமா ாலே முறிந்துவிழுகையைச் சொல்லவேண்டியிருக்க, "வாட"என்றதுக்கு- டும் போதுபோனானென்று விவக்ஷித்து ஹேதுபூர்வகம் தாத்பர்யமருளிச் ய்கிறார் (அஸுரேத்யாதி). ஒக்கலித்திட்டு - பழகின, ஆடலுடைத்தாய் லதான மா என்று சப்தார்த்தமாய், தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆவால யாதி). (ஆவாலங்கொட்டுகை) குதிரை நடைபழக்குகைக்குக் கொட்டுகை.

—பேய்மகள் கொங்கை நஞ்சுண்ட பிள்ளை பரிசிதுவென்றால்
மாநில மாமகள் மாதர் கேள்வ னிவனென்றும் வண்டுண்
பூமகள் நாயகனென்றும் புலன் கெழு கோவியர் பாடித்
தேமலர் தூவ வருவான் சித்திரகூடத்துள்ளானே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ய்மகள் | பேயானபூதனையுடை [ய | பிள்ளைபரிசுஎன்றால் | பிள்ளையுடையப்ரகாரம் என்னக்கேட்டு, |
| ங்கை | முலையில் | | |
| சு | விஷத்தை | இவன் | இந்தக்ருஷ்ணன் (இளம்பிள்ளையல்லன், |
| ட | அமுதுசெய்தருளின | | |
| | ஆச்சர்யமானவிச்செயல் | மா | பஞ்சாசத்கோடிவிஸ்தீர்ணயான |

(க) கக - ௪ - கூ.

| | |
|---|---|
| நிலமாமகள்மாதர் | பூமியை ப்ரகாரமாகவுடைய ஸ்ரீபூமிப்பிராட்டிக்கும் |
| கேள்வன்என்று | வல்லபன்என்றும், |
| வண்டு | வண்டுகள் |
| உண் | மதுபானம்பண்ணவிழிகிற |
| பூமகள் | தாமரைப்பூவைப்பிறந்தகமாகவுடைய பெரியபிராட்டியார்க்கும் |
| நாயகன்என்று | பதியென்றும் |
| புலன்கெழு | கண்டார்நெஞ்சைக் கவரும்வடிவையுடைய |
| கோவியர் | இடைப்பெண்கள் |
| பாடி | ஸ்தோத்ரபூர்வகமாகப்பாடி |
| தேன்மலர் | செவ்விகுன்றாதபூ |
| தூவ | பணிமாற |
| வருவான் | வருமவன் |
| | சித்திரகூடத்துள்ளான். |

வ்யா.—இரண்டாம்பாட்டு.(பேய்மகளித்யாதி)†(பிள்ளை§யுடை படி-பேயாய்வந்த ஸ்த்ரீயினுடைய முலையில் நஞ்சையுண்ட ஆ யமான செயலென்றால், "இவன் கேவலம் பிள்ளையல்லன், ஸ்ரீபூ பிராட்டிக்கு வல்லபன், பெரியபிராட்டியார்க்கு நாயகன்" என் கண்டாருடைய இந்த்ரியங்களைப் பிணிக்கும் வடிவையுடைய இ ப்பெண்கள்பாடி,செவ்விப்பூவைத் தூவ வருமவன். †(பொலன்கெ கோவியர்) என்று - பொன்னாலேசெய்த ஆபரணத்தையுடைய கோ வியரென்னவுமாம். ... ... ... ... ...

---

அரு.—இரண்டாம்பாட்டு. (பேயித்யாதி) கோவர்த்தநோத்தர அதிமாநுஷசேஷ்டிதங்களைச்செய்தவனே சித்ரகூடத்துள்ளானென்ற நிஶ்சயிக்கும்படி யெங்ஙனே? என்னும் ஜிஜ்ஞாஸையிலே; இடைப் ளையா யிருக்கச்செய்தே ஶ்ரிய:பதியென்று நிஶ்சயித்தார் இடைப்பெண் கண்டார்களே, அங்ஙனே நீங்களும்கொள்ளுங்கோளென்கிறாரென்று ஸங்

"பிள்ளைபரிசு - பேய்மகள் கொங்கைநஞ்சுண்ட - இதுவென்றால், நிலம்" இத்யாதி என்றந்வயம் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (பிள் யித்யாதி). (பிள்ளையுடையபடி) என்று சில ஸ்ரீகோசங்களிலுண்டாயிருக் அப்போது அந்வயத்திலே திருவுள்ளம். அன்றிக்கே, சில ஸ்ரீகோசங்க (பிள்ளையுடையபடியே) என்று முண்டு; அப்போது, பிள்ளையைப்போலே நுஷ்யமானபடியே என்றாய், "பேய்" என்றும் "மகள்" என்றும் சொ பதத்வயத்துக்கும் - பேயானது மநுஷ்யவேஷங்கொண்டதென்று க ருளிச்செய்கைக்கு த்ருஷ்டாந்தமென்று கொள்ளவேணும்; இப்போது வஸ்த்திதமே அந்வயம். பொலன் - ஆபரணம், கெழுமுகை - சேருகை அருளிச்செய்கிறார் (பொலனித்யாதி). ... ... ...

---

§ குண்டலிதம் அரும்பதத்துக்குப் பாடாந்தரமாயினும், ப்ராசீந வ் யாந ஸ்ரீகோசங்களிலெங்கும் "பிள்ளையுடைய" என்றே காண்கிறது.

மூ.—பண்டிவன் வெண்ணெயுண்டானென் றாய்ச்சியர்கூடி§யிழிப்ப
எண்டிசையோரும் வணங்க விணை மருதூடு நடந்திட்
டண்டரும் வானத் தவரு மாயிர நாமங்களோடு
திண்டிறல் பாட வருவான் சித்திரகூடத் துள்ளானே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| இவன் | இச்சிறுப்பிள்ளை | நடந்திட்டு | தவழ்ந்துபோய் |
| வெண்ணெய் உண்டானென்று | வெண்ணெயைக்களவுகண்டு அமுதுசெய்தானென்று | அண்டரும் | நித்யஸூரிகளும் |
| ஆய்ச்சியர் | இடைப்பெண்கள் | வானத்தவரும் | ப்ரஹ்மாதிகளும் |
| கூடி | திரண்டு | ஆயிரநாமங்களோடு | ஸஹஸ்ரநாமங்களைச் சொல்லி, (அவனுடைய) |
| இழிப்ப | பழிக்க | திண் | திண்ணிதான |
| எண்திசையோரும் | எட்டுதிக்கிலுள்ளாரும் | திறல் | ஆண்பிள்ளைத்தனத்தை |
| வணங்க | ஸேவிக்கும்படியாக | பண்டு | முற்காலத்திலே |
| இணைமருதூடு | சேர்ந்துநின்ற இரண்டு மருதமரங்களின் நடுவே | பாட | பாடும்படி |
| | | வருவான் | வருமவன் |

சித்திரகூடத்துள்ளான். (௩)

வ்யா.—(பண்டித்யாதி) "இவன் வெண்ணெயுண்டான்" என்று இடைப்பெண்கள் கூடி †யேச, எட்டுதிக்கிலுள்ளாரும் திருவடிகளிலே வணங்கும்படியாக, நிர்விவரமான மருதினுள்ளிட்டுப்போய், இடையர்களும் தேவர்களுமாய் ஆயிரந்திருநாமங்களைச்சொல்லிக்கொண்டு, தன்னுடைய ஆண்பிள்ளைத்தனத்தைப் பண்டு பாடவருவான். ... ... • ... ... ... ... ... (௩)

அரு.—மூன்றாம்பாட்டு. (பண்டித்யாதி) பேய்முலையுண்டபடியைக்கண்ட இடைப்பெண்கள் மேன்மை பேசினாராகிலும், வெண்ணெயுண்டபோது இடைப்பிள்ளையென்றே ஏசவுங்கண்டோமீ! என்ன; வெண்ணெயுண்டு கட்டுண்டுநின்றபோதே, நின்ற மருதிறுத்து, தேவராலும் இடையராலும் கொண்டாடப்பட்டான் கண்டீர் என்று நெஞ்சிலுறைக்கச் சொல்லுகிறாரென்று ஸங்கதி.

அழைக்கை-கூப்பிடுகையாய், பலித்தவர்த்தம் (ஏச) என்றது. "இவன்" என்றுதுடங்கி, "திண்டிறல் - பண்டு - பாடவருவான்" என்றந்வயம். ... (௩)

மூ.—வளைக்கை நெடுங்கண் மடவா ராய்ச்சிய ரஞ்சி யழைப்பத்
தளைத் தவிழ் தாமரைப்பொய்கைத் தண்டடம் புக்கண்டர்காண
முளைத்த வெயிற்றழல் நாகத் துச்சியில் நின்றதுவாடத்
திளைத்தமர் செய்து வருவான் சித்திரகூடத்துள்ளானே. (ச)

§ அழைப்ப என்று இவ்வரும்பதத்துக்குப்பாடம். ஆயினும் "இழிப்ப" என்பதே ப்ராசீந பாடமாகக் காண்கிறது.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வளை | வளைகளாலே அலங்கரிக்கப்பட்ட | புக்கு | போய் |
| கை | கைகளையும் | அண்டர் | இடையர் |
| நெடு | நீண்ட | காண | காணும்படியாக |
| கண் | கண்களையும் [யரான | முளைத்தஎயிறு | முளைத்தபற்களையும் |
| மடவார் | மடப்பத்தையுமுடை | அழல் | விஷாக்நியையுமு [டை |
| ஆய்ச்சியர் | ஸ்ரீகோபிமார்கள் | நாகத்துஉச்சியில் | காளியனுகிறபாம்பின் தலையிலே |
| அஞ்சி | பயப்பட்டு | நின்று | ஒருபடிப்படநின்று |
| அழைப்ப | கூப்பிட | அதுவாட | அது இளைக்கும்படி |
| தளை அவிழ் | கட்டு அவிழுகிற | திளைத்து | களித்து நர்த்தநஞ்செ |
| தாமரைப்பொய்கை | தாமரைத்தடாகத்தின் | அமர்செய்து | பூசல்பண்ணி [ய்து |
| தண் | குளிர்ந்த | வருவான் | வருமவன் |
| தடம் | கரையிலே | | |

சித்திரகூடத்துள்ளான். (௪

வ்யா.—நாலாம்பாட்டு. (வளைக்கையித்யாதி) வளையாலே அலங்க்ருதமான கையையும், பீதை(ஃ)களாய்ப்பார்க்கும் நோக்கையுமுடைய இடைப்பெண்கள் அஞ்சிக்கூப்பிட, † கட்டவிழ்ந்தலர்ந்த தாமரைப்பொய்கையினுடைய ஶ்ரமஹரமான கரையிலேசென்று இடையர்காண, முளைத்தவெயிற்றையுடைய பாம்பினுடைய உச்சியிலே புக்குநின்று அதுவாடும்படி கூடவிளையாடி † அமர்செய்து வருமவன். ... ... ... ... ...(௪

---

அரு.—நாலாம்பாட்டு. (வளையித்யாதி) மருதிறுத்த வளவன்றிக்கே பாம்பின் படத்தில் தானேபோய் நடமாடின அபதாநத்தாலும் அவர்கள் பனென்றிருந்தார்களென்று நியாமகாந்தர மருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

"தளைத்தவிழ்" என்றவிடத்தில், "அத்து"சாரியைச் சொல்லாய், "தளை அவிழ்" என்றாயருளிச்செய்கிறார் (கட்டவிழ்ந்தலர்ந்த) என்று. (அமர்செய்து) - யுத்தம்பண்ணி. ... ... ... ... ...(௪

மூ.—பருவக் கருமுகி லொத்து முத்துடை மா கடலொத்து
அருவித் திரடிகழ்கின்ற வாயிரம் பொன்மலை யொத்து
உருவக் கருங்குழலாய்ச்சித் திறத் தினமால் விடைசெற்றுத்
தெருவில் திளைத்து வருவான் சித்திரகூடத்துள்ளானே. (௫

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பருவம் | சார்காலத்திலுண்டான [ம் | மா | பெரிய |
| கருமுகில்ஒத்து | காளமேகம்போலேயு | கடல்ஒத்து | கடல்போலேயும் |
| முத்துஉடை | முத்துக்களையுடைய | அருவித்திரள் | அருவிகளின் ஸமூஹத்தினாலே |

| | | | |
|---|---|---|---|
| ிகழ்கின்ற | விளங்காநின்றுள்ள | இனம் | ஒன்றுகத்திரண்ட |
| ஆயிரம்பொன் | அநேகம்ரத்நபர்வதங் | மால்விடை | பெரிய ருஷபங்களை |
| மலைஒத்து | கள்போலேயுமாய் | செற்று | நிரஸித்து |
| -ருவம் | அழகியவடிவையும் | தெருவில் | வீதியிலே |
| ரு | கறுத்த [ய | திளைத்து | (களித்து) விளையாடி |
| ழல் | திருக்குழலையுமுடை | வருவான் | வருமவன் |
| ஆய்ச்சிதிறத்து | நப்பின்னைப்பிராட்டி க்காக | சித்திரகூடத்துள்ளான். (௫) | |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (பருவமித்யாதி) † வர்ஷுகவலாஹ ம்போலேயும், முத்துடைய பெருங்கடல்போலேயும், அருவித் ிரள்களாலே விளங்காநின்றுள்ள †ஆயிரம் பொன்மலைபோலேயு ாய், அழகிய வடிவையும் கறுத்த திருக்குழலையுமுடைய நப்பின் னப்பிராட்டியிடையாட்டத்துக்காக, திரண்டு பெருமையையுடைய ருஷபங்களைக்கொன்று, தன்பருவத்திற்பிள்ளைகளோடே தெருவிலே டி விளையாடி வருமவன். ... ... ... (௫)

அரு.—அஞ்சாம்பாட்டு. (பருவமித்யாதி) கீழ் நாலு பாட்டாலும் - அவ ிமாநுஷ சேஷ்டிதங்களைச்சொல்லி, அத்தால் அவன்பரன் என்றற் பாலே நீங்களுமவனை நிர்ணயித்தாஶ்ரயியுங்கோளென்றார்; இனி மேல் ாட்டுக்களில் - நப்பின்னை முதலானார்க்கு விரோதி நிவர்த்தந முகத்தாலே தவினாற்போலே உங்களுக்கு முதவுவானென்பாராய், அதில் நப்பின்னைக் தவினவித்தை இதிலருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

நப்பின்னை க்ருஷ்ணனோடொத்த நிறமுடையவளென்று விவக்ஷித்தரு ிச்செய்கிறார் (வர்ஷுகேத்யாதி). (பொன்மலைபோலேயும்) என்றது - ஆப ணச் சேர்த்தியாலே. ... ... ... ... ... ... (௫)

.—எய்யச் சிதைந்த திலங்கை மலங்க வரு மழை காப்பான்
உய்யப் பருவரை தாங்கி யாநிரை காத்தானென்றேத்தி
வையத் §தெவரும் வணங்க வணங்கெழு மாமலைபோலே
தெய்வப்புள்ளேறிவருவான் சித்திரகூடத்துள்ளானே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ய்ய | அம்பினாலடித்தபோ | வரும்மழை | வருகிறமழையை |
| )லங்கை | லங்கையானது [து | காப்பான் | போக்குகைக்காக |
| தைந்தது | அழிந்தது ; | உய்ய | (அவை) உஜ்ஜீவிக்கும் |
| நிரை | பசுத்திரள் | பருவரை | பெரியமலையை [படி |
| லங்க | கலங்கும்படி | தாங்கி | எடுத்து (அவற்றை) |

§ தேவரும் என்று அரும்பதத்துக்குப்பாடம்.

| | | | |
|---|---|---|---|
| காத்தானென்று | ரக்ஷித்தானென்று | மா | பெரிய |
| வையத்து | பூமியிலுள்ள | மலைபோலே | மலையைப்போலே |
| எவரும் | ஸத்வப்ரக்ருதிகளெல்லாரும் | தெய்வம் | அழகிய |
| ஏத்தி | ஸ்தோத்ரம்பண்ணி | புள் | பெரியதிருவடிமேலே |
| வணங்க | ஆஶ்ரயிக்கும்படியாக | ஏறி | ஏறிக்கொண்டு |
| அணங்குஎழு | தேவாவிஷ்டமான | வருவான் | வருமவன் |
| | | சித்திரகூடத்துள்ளான். | (ஸ) |

வ்யா.—ஆறும்பாட்டு. (எய்யவித்யாதி) இவன் பண்டு எய்ய, லங்கையழிந்தது; பசுக்களு மிடையரும் மலங்கும்படியாக வருகிற மழையைக் காக்கைக்காக, அவை உய்யும்படிக் கீடாகப் பெரிய மலையையெடுத்துக்காத்தானென்றேத்தி. †பூமியிலுள்ளாரெல்லாரும் வணங்க, தேவாவிஷ்டமான மலைபோலே, பெரிய திருவடிமேலே யேறி வருமவன். ... ... ... ... (ஸ)

---

அரு.—ஆறாம்பாட்டு. (எய்யவித்யாதி) இதில் - பிராட்டிக்கும் பசுக்களுக்கு முதவினாற்போலே யுதவுமவனென்றருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

(பூமியிலுள்ளாரெல்லாரும்) என்றதுக்கு - "வையத்தேவர்" என்கிறபதத்தாலே பூஸுரர்களைச் சொல்லிற்றேயாகிலும், ஸத்வப்ரசுரரான தைவப்ரக்ருதிகளெல்லாரையும் சொல்லுமென்று திருவுள்ளம். ... ... (ஸ)

மூ.—ஆவரிவை செய்தறிவா ரஞ்சன மா மலைபோலே
மேவு சினத் தடல் வேழம் வீழ முனிந்தழகாய
காவிமலர் நெடுங்கண்ணார் கைதொழ வீதிவருவான்
தேவர்வணங்கு தண்டில்லைச் சித்திரகூடத்துள்ளானே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இவை | இப்படிப்பட்ட ஆனைத்தொழில்களை | முனிந்து | சீறியருளி |
| செய்தறிவார் ஆர் | செய்தார் எவர்? ஒருவருமில்லை; (அதாவதென்னென்னில்;) | அழகாய | அழகையுடைத்தாய் |
| மா | பெரிய | காவிமலர் | நீலோத்பலம்போலே |
| அஞ்சனமலைபோலே | அஞ்சநகிரிபோலேயாய் | நெடு | நீண்ட [கறுத்த |
| மேவு | பொருந்திய [தாய் | கண்ணார் | கண்களையுடையஸ்த்ரீகள் |
| சினம் | கோபத்தை யுடைத் | கைதொழ | ஸேவிக்கும்படியாக |
| அடல் | மிடுக்கையுடைய | வீதி | திருவீதியிலே |
| வேழம் | குவலயாபீடம் என்னும்யானை | வருவான் | எழுந்தருளுமவன், |
| வீழ | விழும்படி | தேவர்வணங்கு | தேவர்கள்வந்துஆஶ்ரயிக்குமதாய் |
| | | தண் | ஶ்ரமஹரமான |
| | | | தில்லைச்சித்திரகூடத்துள்ளான்.(எ) |

வ்யா.—ஏழாம்பாட்டு. (ஆவரித்யாதி) † எவரிவை செய்தறி
ார்? பெரியதொரு † அஞ்சநகிரிபோலே,ஸ்வாபாவிகமான சினத்தை
டைத்தாய் யுத்தோந்முகமான ஆனை குட்டிச் சுவர்போலே விழும்
டி சீறி, தர்சநீயங்களாய் காவிமலர்போலே கறுத்து நெடிய
ண்ணேயுடைய ஸ்த்ரீகள் கைதொழும்படி வீதியிலே வருமவன்,
தவர்களாஶ்ரயிக்கும் தில்லைச்சித்திரகூடத்துள்ளானே. ... (எ)

---

அரு.—ஏழாம்பாட்டு. (ஆவரித்யாதி) ஆநிரை காத்தவளவேயன்றிக்கே
ரீமதுரையில் பெண்களுக்குக் களிறுதருபுணர்ச்சி கொடுத்தவன் உங்க
க்குதவுவனென்கிறுரென்று ஸங்கதி. அதாவது - ஆனையால்வந்த ஆபத்தை
போக்கித் தன்னைக் கண்ணாரக்கண்டநுபவிக்கக் கொடுத்தானென்கை. க்ரு
ண்ணன்மேலே யானைவருமதுவே பெண்களுக்காபத்திறே.

(எவரிவை செய்தறிவார்) என்றதுக்கு மூன்றுயோஜநை. அதாவது -
ெய்தவிவை - குவலயாபீடநிரஸநாதி வ்யாபாரங்களை, எவரறிவார்? ஒருவரு
ிவாரில்லை என்று ஆழ்வார் தம்மிலே தாம்நொந்து, எத்தனை நாமுபதேசித்
தும் திருந்துவாரரிதாயிருந்ததென்று ஈடுபடுகிறுரென்னுதல்; அன்றிக்கே,
ஶ்ரிதர்க்காக இவ்வருந்தொழில்களைச் செய்தாரார்? ஒருவருமில்லை என்று
பெருமானுடைய சேஷ்டிதத்திலீடுபடுகிறுரென்னுதல்; அங்ஙனுமன்றிக்
, ஸ்ரீமதுரையில் பெண்களீடுபாடாய், "செய்தறிவார்" என்ற வநந்தரம்,
று என்றொருபதத்தை மூலவ்யாக்யாநங்களில் அத்யாஹரித்துக்கொண்டு,
கதொழும்படி) என்றபதத்தோடந்வயித்துக் கொள்ளவுமாம். (அஞ்சந
போலே) என்றதுக்கு - (வீதியிலே வருமவன்) என்றத்தோடந்வயம்.
அஞ்சநகிரிபோலேயிருக்கிற" என்று - குவலயாபீடத்துக்கு விசேஷணமாக
ாம். ... ... ... ... ... ... ... (எ)

—பொங்கியமரிலொருகால் பொன்பெயரோனை வெருவ
அங்கவனுக மளைந்திட் டாயிரந்தோ ளெழுந்தாடப்
பைங்க ணிரண்டெரிகான்ற நீண்ட வெயிற்றொடு பேழ்வாய்ச்
சிங்கவுருவில் வருவான் சித்திரகூடத்துள்ளானே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கால் | ப்ரஹ்லாதனைச் சீறி னவன்று | அங்கு | அவ்விடத்திலே |
| | | அவன் ஆகம் | அவனுடையஉடம் |
| ரில் | யுத்தத்தில் | அளைந்திட்டு | பிளந்து [பை |
| ான்பெய | ஹிரண்யனை | ஆயிரந்தோள் எழுந்து ஆட | அநேகம்திருத்தோள் களும்தோற்றவ்யா பரித்து [ன்றுள்ள |
| ரானை | | | |
| ருவ | அவன்) அஞ்சும்படி | | |
| ங்கி | கிளர்ந்து (சீறி) | எரிகான்ற | நெருப்பை யுமிழாநி |

| | | | |
|---|---|---|---|
| பை | பசுத்த | வாய் | வாயையுமுடைய |
| இரண்டுகண் | இரண்டுகண்களையும் | சிங்கவுருவில் | நரஸிஹ்மரூபியாய் |
| நீண்ட | தீர்க்கமான | வருவான் | வருமவன் |
| எயிறு | கோரைப்பற்களையும் | | சித்திரகூடத்துள்ளான். |
| பேழ் | பெரிய | | |

வ்யா.—எட்டாம்பாட்டு. (பொங்கியித்யாதி)†யுத்தத்திலே ப டொருகால் ஹிரண்யனை வெருவும்படி †சீறி, அவ்விடத்திலே அ னுடைய உடம்பையளைந்து, ஆயிரந்தோள்தோற்ற வ்யாபரித்த, ஜா யுசிதமாக எரிகான்ற பசுமையையுடைய கண்ணும், நீண்ட எயிற பெரியவாயுமான ஸிம்ஹரூபத்தை யுடையனாய் வருமவன். பொ ங்குகை - மிகுதி. ... ... ... ... (

---

அரு.—எட்டாம்பாட்டு. (பொங்கியித்யாதி) கீழ்ப்பாட்டிலே - திரு வாரொருவருமில்லை என்றபக்ஷத்தில், தம்முடைய க்ருபாதிசயத்தாலே தி தாத லோகத்தார்க்கு அச்சம் பிறக்கும்படி, விலங்கிப்போனரெல்லா ஹிரண்யன்பட்டது படுவரென்கிறாரென்று ஸங்கதி; மற்றைப்பக்ஷங்கள் பெண்களுக்குதவின வளவன்றிக்கே ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுக்குவுந்துதோ, னற்போலே யுதவுமவனென்கிறாரென்று ஸங்கதி.

"அமரிலொருகால் பொன்பெயரோனை வெருவ - பொங்கி - அ இத்யாத்யந்வயமுகேநவருளிச்செய்கிறார் (யுத்தத்திலே யித்யாதி). பெ ங்குகை - மிகுதியாய், கோபத்தால் வந்தமிகுதியாய், பலித்தவர்த்தம் ( என்றது. கான்ற - உமிழ்ந்த. ... ... ... ...

மூ.—கருமுகில்போல்வதோர்மேனி கையன வாழியும் சங்கும்
பெருவிறல்வானவர்சூழ வேழுலகும் தொழுதேத்த
ஒருமகளாயர்மடந்தை யொருத்தி நிலமகள் மற்றைத்
திருமகளோடும் வருவான் சித்திரகூடத்துள்ளானே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கருமுகில்போல்வது | காளமேகம்போலே கறுத்து | சங்கும் | ஸ்ரீபாஞ்சஜந்யா னையும் [ |
| ஓர் | ஒப்பற்ற | கையன | திருக்கைகளிலுடை |
| மேனி | வடிவழகையுடையனாய் [யும் | பெருவிறல் | மிக்கமிடுக்கையு |
| ஆழியும் | திருவாழியாழ்வானை | வானவர் | தேவர்கள் |
| | | சூழ | சூழ்ந்து ஸேவித் கவும் |

| | | | |
|---|---|---|---|
| ழ்உலகும் | எழுலோகங்களிலுள் | ஒருத்திநிலமகள் மற்றொருத்தியான | ஸ்ரீ பூமிப்பிராட்டியோடும் |
| தொழுது | ஸேவித்து [ளாரும் | மற்றை திருமகளோடும் | இன்னும் பெரியபிராட்டியாரோடும் கூ |
| ஏத்த | ஸ்தோத்ரம்பண்ணும் படிக்கீடாக | வருவான் | வருமவன் [ட |
| திருமகள் ஆயர் மடந்தை | ஒருத்தியான நப்பின்னைப் பிராட்டியோடும் | | சித்திரகூடத்துள்ளான். (௯) |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (கருமுகிலித்யாதி) காளமேகம் போலேயிருக்கும் வடிவையும், கையில் திருவாழியையும் ஸ்ரீபாஞ்சஜந்யத்தையுமுடையனாய், பெரிய மிடுக்கையுடைய ப்ரஹ்மாதிகள் சூழ்ந்து ஸேவிக்க, ஸப்தலோகத்திலுள்ளாரும் திருவடிகளிலே விழுந்தேத்த, பிராட்டிமார் மூவரோடுங்கூட வருமவன். (௯)

அரு.—ஒன்பதாம்பாட்டு. (கருமுகிலித்யாதி) கீழ் - எம்பெருமானுடைய அவதாரங்கள் சொல்லிக்கொண்டு மிடுக்கை ஆஸ்ரயணோபயுக்தமாகச்சொல்லி, இவையொன்று மில்லாவிட்டாலும் விடலாமோ இவனுடைய போக்யதையென்று திருவுள்ளம்பற்றி, வடிவழகும் ஆயுதச்சேர்த்தியழகும் பிராட்டிமாரோட்டைச் சேர்த்தியும் கண்டு தூர்மாநிகளான ப்ரஹ்மாதிகளும் வணங்கும்படி பாரீரென்று உபதேசிக்கிறாரென்று ஸங்கதி. ... (௯)

மூ.—தேனமர் பூம்பொழில் தில்லைச்சித்திரகூடமமர்ந்த
வானவர் தங்கள்பிரானை மங்கையர்கோன்மருவார்
ஊனமர்வேல் கலிகன்றி யொண்டமிழொன்பதோடொன்றும்
தானிவை கற்று வல்லார்மேல் சாரா தீவினைதானே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தேன் | வண்டுகள் | அமர் | பொருந்தித்தைக்கும்படி |
| அமர் | மொய்த்த | வேல் | வேல்தொழிலில் வல்லரான [ய்த |
| பூ | அழகிய | கலிகன்றி | ஆழ்வார் அருளிச்செ |
| பொழில் | சோலையையுடைய | ஒண்தமிழ் | அழகிய தமிழ்ப்பாஷையாலான |
| தில்லைச்சித்திரகூடம் | தில்லைத் திருச்சித்திரகூடத்திலே [கிற | இவை ஒன்பதோடொன்றும் | இப்பத்துப்பாட்டையும் |
| அமர்ந்த | நித்யவாஸம் பண்ணு | | [யஸித்து |
| வானவர்தங்கள் பிரானை | அயர்வறுமமரர்களுக்குத் தலைவனானவன்விஷயமாய் | கற்று | அர்த்தத்துடன் அப் |
| மங்கையர்கோன் | திருமங்கையிலுள்ளார்க்கு ராஜாவாய் | வல்லார் மேல் | அதிகரிக்க வல்லவர்க |
| மருவார் | சத்ருக்களுடைய | தீவினை | பாபங்கள் [ள்பக்கல் |
| ஊன் | சரீரத்தில் | சாரா | கிட்டமாட்டா... (௧௦) |

வ்யா.— பத்தாம்பாட்டு. (தேனித்யாதி) வண்டுகள்படிந்த பூத்தபொழிலையுடைய தில்லையில் சித்திரகூடத்திலேயமர்ந்த†*அயர்வறுமமரர்களதிபதியை, திருமங்கைக்குராஜாவாய்,†சத்ருக்கள்சரீரமே தனக்கு உறையாகவுடைய வேலையுடைய ஆழ்வாரருளிச்செய்த அழகிய தமிழான விப்பத்துமப்யஸித்தவர்கள்பக்கல், அவர்கள் பண்ணினபாபம் பலாநுபவத்துக்காகச் சாரா. ... ... (௧0)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

அரு.—பத்தாம்பாட்டு. (தேனித்யாதி) கீழ்ப்பாட்டில்,"வானவர்"என்ற பதத்தை, ஆஶ்ரயிப்பார்க்குறப்பாக, தார்மிகளும் வந்தாஶ்ரயிக்கக்கடவர்களேயென்ன வேண்டுகையால், அதுக்காக ப்ரஹ்மாதிகள் பரமாக்கிலேரேயாகிலும், இப்பாட்டில் "வானவர்" என்றதுக்கு, "தங்கள்" என்று அஸாதாரண்யம் தோற்றச்சொல்லுகையாலும், ஆழ்வார்க்கு ப்ரஹ்மாதிகளுக்கு பிரானென்றது-அதிசயமாய்த்தோற்றாமையாலும், (க) "அமரர்க்குமெய்தாவண்டத்திருப்பீர்" என்று பல(ஃல)ஸ்வரூபத்தைக் கீழ்த்திருமொழியிலருளிச்செய்தத்தோடு இத்திருமொழிக்கு ஏகவாக்யதையைச்சொல்லுகையாலே ப்ராப்யகோடிகடித்ரான நித்யஸூரிகளேயாகவேணுமென்றருளிச்செய்கிறார் (அயர்வறுமமரர்களதிபதியை) என்று. இப்பதத்துக்கு (அருளிச்செய்த) என்றத்தோடான்வயம். "மருவார்" என்றதினர்த்தம் (சத்ருக்கள்) என்றது. (௧0)

ஜீயர் திருவடிகளே சரணம்.

மூன்றும்பத்தில் மூன்றுந்திருமொழி முடிந்தது.

(க) ௩-உ-௯.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## பெரியதிருமொழி ங - ம் பத்து, ச - ம் திருமொழி, ஒருகுறள் ப்ரவேசம்.



வ்யா.—†நீங்கள் அவனைப்பெறுகைக்குறுப்பாகப்பண்ணும் ஸா நாநுஷ்டாநத்தை அவன்றான் உங்களைப் பெறுகைக்குறுப்பாக வதாராதிமுகங்களாலே பண்ணிக்கொடு இங்கேவந்து நின்றனெ ரார்; அவன்படியிதுவானபின்பு, ஆர்த்தித்வம் துடக்கமாக மேலு ளவற்றையெல்லாம் அவன் கையிலேயேறிட்டு, நீங்க ளவனுகந்த ராமவிண்ணகரை யாஶ்ரயியுங்கோளென்கிறார். இவன் †பரமபக்தி ர்யந்தமாகப்பண்ணினாலும் அதடைய ப்ராதிகூல்யநிவ்ருத்தி த்ரத்திலே நிற்கும்படியிறே பேற்றினுடைய வைலக்ஷண்யத்தைப் ர்த்தாலிருப்பது.... ... ... .... ... *

---

அரு.—ஒருகுறளின் ப்ரவேசம். கீழிரண்டு திருமொழியாலுமாக - நீங் ளொரு ஸாதநாநுஷ்டாநம் பண்ணவேண்டா, சித்ரகூடத்துள்ளானை ஶ்ரயியுங்கோ ளென்னாநின்றீர்; பேற்றின்கனத்தைப்பார்த்தால் இவ்வள னாலே பலம் கைப்படுமென்று நாங்கள் விஶ்வஸிக்கும்படி யெங்ஙனேயென் ம் சங்கையிலே; வகுத்த ஸ்வாமியாகையால் உங்களைப்பெறவேணுமென்று, ாப்தாவும் ப்ராபகனும் ப்ராப்திக்குகப்பானு மவனாயிருக்கையா லுங்களு ந விஶ்வஸிக்கத்தட்டென்? அவனிலும் அவனுகந்த ஊரையாஶ்ரயிக்கையே மெயுமென்றருளிச் செய்கிறாரென்னும் ஸங்கதியை யருளிச்செய்கிறார் (நீங் ரித்யாதி). ஆர்த்தித்வமாத்ரமாகிலும் இவன் பக்கலிலே வேண்டாவோ? இத் கயுமவன்றலையிலே யேறிட்டு நிர்ப்பரனாயிருக்கக்கூடுமோவென்ன வருளி செய்கிறார் (இவனித்யாதி). பேற்றுக்கு அப்ரதிஷேதமே வேண்டுவது, அது மேற்பட்ட ஆர்த்தித்வம் முதலானவை யெல்லா மிவனுக்கு வேணுமென் நிர்ப்பந்தமில்லையென்று கருத்து. ... ... ... ... *

—ஒருகுறளா யிருநிலமூவடிமண் வேண்டி
 யுலகனைத்து மீரடியா லொடுக்கி யொன்றும்
தருகவென மாவலியைச் சிறையில்வைத்த
 தாடாளன் தாளணைவீர் தக்ககீர்த்தி
யருமறையின் திரள் நான்கும் வேள்வியைந்து
 மங்கங்களவை யாறு மிசைகளேழும்
தெருவின்மலி விழாவளமும் சிறக்குங்காழிச்
 சீராமவிண்ணகரே சேர்மினீரே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஒரு | அத்விதீயமான | கீர்த்தி | பெருமையையுடை தாய் [மா |
| குறளாய் | வாமநவடிவைக்கொண்டு (மஹாபலிபக்கலிலேசென்று) | அரு | அர்த்தமறிய அசக்ய |
| | | மறையின் | வேதங்களின் |
| இருநிலம் | பரந்தபூமியில் | திரள் | திரள்கள் |
| மூவடிமண் | மூன்றுஅடிமண்ணை | நான்கும் | நாலும் |
| வேண்டி | இரந்து | ஐந்துவேள்வியும் | பஞ்சமஹாயஜ்ஞங்களும் |
| உலகனைத்தும் | லோகங்களெல்லாவற்றையும் | ஆறுஅங்கங்களும் | வ்யாகரணாதிஅங்கங்களாறும் |
| ஈரடியால் | இரண்டடியாலே | ஏழுஇசைகளும் | ஸப்தஸ்வரங்களும் |
| ஒடுக்கி | அடக்கி | மலி | மிக்கிருப்பதாய் |
| ஒன்றும் | மற்றைஓரடியும் | விழா | உத்ஸவங்களின் |
| தருகவென | தரவேண்டுமென்று | வளமும் | அழகும் |
| மாவலியை | மஹாபலியை | சிறக்கும் | மிகும்படியான |
| சிறையில்வைத்த | பாதாளமாகிறசிறையிலேவைத்தவனான | தெருவின் | வீதிகளையுடைய |
| தாடாளன் | ஸர்வாதிகனுடைய | காழி | காழியில் |
| தாள் | திருவடிகளை | சீராமவிண்ணகர் | ஸ்ரீராமவிண்ணகரை |
| அணைவீர் | கிட்டவேண்டியிருப்பீர்! [ன | நீர் | நீங்கள் |
| தக்க | அவனுக்குத்தகுதியா | சேர்மின் | ஆஶ்ரயியுங்கோள். |

வ்யா.—முதற்பாட்டு.--(ஒருகுறளாய்) வடிவைக்கண்டபோதே சொல்லிற்றடையக் கொடுக்கவேண்டும்படியான அத்விதீயவாமனுய். (இருநிலம்) பரப்பையுடைத்தானபூமியை. (மூவடிமண்வேண்டி) †தனக்கென்னக்கால்பாவுகைக்கு ஓரிடமில்லாதாரைப்போலே இத்தையவனுக்காக்கி அவன்பக்கலிலேயிரந்து, இந்தலோகங்களையுடைய இரண்டடியாலே அடக்கி, "மூன்றடிதருகிறேம் என்றும் மற்றை ஓரடியும் தாராயோ" என்று. (மாவலியைச் சிறையில் வைத்த) அநந்தரம், இந்த்ரபதம் அவன் பெறக்கடவனாக அவனை பாதாளத்திலே வைத்த. (தாடாளன் தாளணைவீர்) "ஆஶ்ரிதார்த்தமாகத்தானிரந்தான்" என்னும் மேன்மையையுடையவன் திருவடிகளைக் கிட்டவேண்டியிருப்பீர்!

(தக்கவித்யாதி) அபௌருஷேயத்வ நிபந்தநமான கீர்த்தியையுடைய வேதங்களுடைய திரள்கள்நாலும், பஞ்சமஹாயஜ்ஞங்களும், ஆறங்கங்களும், ஏழிசைகளும், தெருவிலேமிக்கிருந்துள்ள உத்ஸவத்தால்வந்த அழகும், இவையெல்லாமடையச் †சிறக்கும்படியான காழியில் சீராமவிண்ணகரை ஆஶ்ரயியுங்கோள். ... ...(

அரு.—முதற்பாட்டு. (ஒரு குறளித்யாதி) "மூவடிமண்வேணுமென்று இருநிலத்தைவேண்டி" என்றந்வயம் திருவுள்ளம்பற்றித் தாத்பர்ய மருளிச் செய்கிருர் (தனக்கென்ன வித்யாதி). தாடாளன் - ஸர்வாதிகள்.

(சிறக்கும்படியான) ஸம்ருத்தமாம்படியான. ... ... (க)

மூ.—நான்முகனுள் மிகத்தருக்கை யிருக்குவாய்மை
நலமிகுசீ ருரோமசனுல் நவிற்று நக்க
னூன்முகமார் தலையோட்டூ ணொழித்த வெந்தை
யொளிமலர்ச்சேவடியணைவீ ருழுசேயோடச்
சூன்முகமார் வளையளைவா யுகுத்த முத்தைத்
தொல்குருகு சினையென்னச்சூழ்ந் தியங்க எங்கும்
தேன்முகமார் கமலவயல் சேல்பாய் காழிச்
சீராமவிண்ணகரேசேர்மினீரே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நான்முகன் | ப்ரஹ்மாவினுடைய | உழு | உழுகிற |
| நாள் | ஆயுஸ்ஸு | சே | எருதுகள் |
| மிக | அதிசயிக்க (அத்தால வனுக்குண்டான) | ஓட | (செருக்காலே) ஓட |
| தருக்கை | கர்வத்தை, | சூல்முகமார் | ப்ரஸவகாலமாயிருக் |
| இருக்கு | வேதத்தை | வளை | சங்குகள் [கிற |
| வாய்மை | உச்சரியாநின்றவனுய் | அளைவாய் | வங்குகளில் |
| நலம்மிகுசீர் | மிக்க ஆசாரத்தையு டையனுன | உகுத்த | ஈன்ற |
| உரோமசனுல் | ரோமசபகவானுல் | முத்தை | முத்துக்களை [வை |
| நவிற்று | போக்குவித்து | தொல்குருகு | பெரியகுருகுகளான |
| நக்கன் | நக்நனுனருத்ரனு டைய (கையிலேஒ ட்டியதாய்) | சினையென்ன | தங்களுடையமுட் டையென்று |
| ஊன்ஆர் | மாம்ஸளமான | சூழ்ந்துஇயங்க | சூழப்பறவாநிற்பதாய் (அக்காற்றாலே) |
| முகன்தலையோ ட்டு | ப்ரஹ்மாவின்கபாலத் தில் | எங்கும் | பார்த்தவிடமெல்லாம் |
| ஊண் | (இரந்துண்கிற) ஊ | தேன் | தேன்வெள்ளத்தை |
| ஒழித்த | போக்கின [ணை | முகமார் | முகத்தாலேசொரி கிற [டைத்தாய் |
| எந்தை | ஸர்வஸ்வாமியினது | கமலம் | தாமரைமலர்களையு |
| ஒளிமலர் | செவ்விமலர்போன்ற | சேல் | சேல்மத்ஸ்யங்கள் |
| சேவடி | சிவந்ததிருவடிகளை | பாய் | பாயாநின்றுள்ள |
| அணைவீர் | சேரவிரும்புவீர்! | வயல் | வயல்களையுடைய |
| | | காழிச்சீராம விண்ணகரேசேர்மின் நீரே. (உ) | |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (நான்முகனித்யாதி) ரோமச பகவான், "ப்ரஹ்மாக்களென்று சிலர் நீர்க்குமிழிபோலே தோற்று வது மறைவதாய்ப் போகக்கடவது எத்தனைபேர்" என்ருனுயிற்று.

†சதுர்முகனுடைய ஆயுஸ்ஸின்மிகுதியாலுண்டான துர்மாநத்தை; †வேதங்களைஉச்சரியாநிற்பானாய் ஆசாரப்ராதாந்யத்தால்வந்த வே றத்தையுடையனான ரோமசபகவானாலே, †"சதுர்த்தசபுவநங்களு கும் கடவேன், என்னோபாதி ஆயுஸ்ஸுடையாருண்டோ" என்கி துர்மாநத்தைத்தவிர்த்து.(நக்கனித்யாதி)†ருத்ரனுடைய பிதாவுமா லோககுருவுமாயிருக்கிறவனைத் தலையையறுத்து, அத்தாலே பாத யாய் மாம்ஸப்ரசுரமான தலையோட்டிலேயிரந்து அதிலே ஜீவித்து திரிகிற எளிவரவைத்தவிர்த்தஸ்வாமி. †ஜகத்துக்கு ஈஶ்வரர்களா ப்ரஸித்தரிருவருமிறே; அவர்களிருவருடையவும் அபிமாநத்தை கழித்தானாயிற்று. (ஒளிமலர்ச்சேவடியணைவீர்) அவனுடைய ஸ்வ பாவிகமான ஈஶ்வரத்வத்தால்வந்த புகரையுடைய திருவடிகளை பெறவேண்டியிருப்பீர்.

(உழுசேயித்யாதி) †ஆனைபோலேயாய் பெரியமிடுக்கையுடை சேக்களையிறே பூட்டியுழுவது. அவைதவறவோடினவாறே, "அ போது ப்ரஸவித்தது, இப்போது ப்ரஸவித்தது" என்றுதோன்று படி தொட்டார்மேலே தோஷமாம்படியிருக்கிற †சங்குகள், தா கிடக்கிறவங்குகளினுடையவாசலிலே முத்துக்களையீன்றன; அவ றை தொல்குருகுண்டு - என்று மொக்கப்பழகச்செய்தேயும் "இ முத்து, இதுமுட்டை" என்று வாசியறியமாட்டாதபடி மூத்தகு குகள், அவை தன்னுடைய முட்டையாகக்கொண்டு விட்டுப்போ மாட்டாதே சுற்றும் பறவாநிற்குமாயிற்று. அவை பறக்கிறகா றாலே, பார்த்தபார்த்தவிடமெல்லாம் பக்வமாய்த் தலையிலே மிக்க னையுடைத்தாயிருக்கிற தாமரைப்பூக்களலராநிற்குமாயிற்று, அ மதுவைப் பாநம்பண்ணின கயல்களானவை பாயாநிற்குமாயிற்று.

---

அரு.—இரண்டாம்பாட்டு. (நான்முகனித்யாதி) தன்னை இரப்பாளா க்கி ஆஶ்ரிதர்க்கரியன செய்யுமவன் வந்திருக்கும் காழிச்சீராமவிண்ணகரை ஆஶ்ரயியுங்கோளென்னச் செய்தேயும், ஆறியிருந்தீர்கள், இதுக்கடி உங்க டைய ஸ்த்திரத்வபுத்தியும், பெருமையுமன்றோ, ப்ரஹ்மாவினாயுஸ்ஸின்ப கேட்டிகோளே. ருத்ரனெளிவரவையும் கண்டிகோளே யென்கிறாரென். ஸங்கதி.

(என்றானாயிற்று) என்றவநந்தரம், அந்தப்புராணப்ரஸித்தியைக் கொண் ருளிச்செய்கிறாரென்று சேஷம். நான்முகனுடைய நாளானது - ஆயுஸ்ஸா னது, மிக - அதிசயிக்க, அத்தாலுண்டான, தருக்கை - கர்வத்தை, என்றுச

ார்த்த மருளிச்செய்கிறார் (சதுர்முகனித்யாதி). "இருக்கு" இத்யாதிக்கு
ப்தார்த்த மருளிச்செய்கிறார் (வேதங்களை யித்யாதி). "நவிற்று" என்றது-
சொல்லுவிக்கையாய், அதுதானும்-நீர்க்குமிழ்போலே எத்தனையேர் ப்ரஹ்மா
க்களென்ற வார்த்தையாய், அத்தால் பலித்த கர்வநிவ்ருத்தியை யருளிச்செய்
கிறார் (சதுர்த்தசேத்யாதி). "முகம்" என்றது - முகன் என்றாய், ப்ரமுகனான
ரஹ்மாவாய், நக்கனுடைய முகனார்தலையோட்டிலூணை யொழித்தவெந்
து என்றந்வயமாய், தாத்பர்ய மருளிச்செய்கிறார் (ருத்ரனுடையவித்யாதி).
ணக்களுழறிவருமிறே. "நக்கனுடைய" என்றதுக்கு, "ஊண்" என்றத்தோ
ந்வயம். இவ்வளவுக்கு முட்கருத்தையருளிச்செய்கிறார் (ஜகத்துக்கித்யாதி).

ப்ரஹ்ம ருத்ராதிகள்போன்ற சேக்களைக்கொண்டு பத்தியுழவனான
வம்பெருமான் பழம்புனமான ஜகத்தை ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணுவிக்க,
வர்கள் "ஈஶ்வரோஹம்" என்று கைகழியவோட, நம்பூர்வர்கள் போன்ற
ங்குகள் ஸ்வஸ்வபாவரைப் பெறுவிக்க, ஆதிமூலமான வெம்பெருமான் தன
கஸாதாரண புத்ரத்வப்ரதிபத்தியாலே இவர்களிடத்தில் வ்யாமுக்தனா
ருக்க, அத்தால் கமலமலர்மேல் பாவை முகக்கமலம் விகஸித்து, அநுராகா
சயம் வெள்ளமிட, அதிலே துள்ளாநிற்பர் நித்யஸூரிகளென்னும் வ்யங்
பார்த்தத்துக்கு ஸூசகமாக, திருப்பதிக்குச் சிறப்பையருளிச்செய்கிறாரெ
று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (ஆனைபோலே யித்யாதி). "வளை"
ன்றதினர்த்தம் (சங்குகள்) என்றது. அளை - வங்குகள். உகுத்த - ஈன்ற. (௨)

௩.—வையணைந்த நுதிக்கோட்டு வராகமொன்றாய்
மண்ணெல்லா மிடந்தெடுத்து மதங்கள்செய்து
நெய்யணைந்த திகிரியினால் வாணன் திண்டோள்
நேர்த்தவன் தாளணைகிற்பீர் நெய்தலோடு
மையணைந்த குவளைகள் தங்கண்களென்றும்
மலர்க்குமுதம் வாயென்றும் கடைசிமார்கள்
செய்யணைந்து களைகளையா தேறும் காழிச்
சீராமவிண்ணகரே சேர்மினீரே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வை அணைந்த | கூர்மைபொருந்திய | மதங்கள் | மதகார்யமானவ்யா பாரங்களை |
| நுதி | முனையையுடைய | | |
| கோடு | கொம்பையுடைத்தா | செய்து | பண்ணி |
| ஒன்று | ஒப்பற்ற [ன | வாணன் | பாணாஸுரனது |
| வராகமாய் | பன்றியுருக்கொண்டு | திண் | த்ருடமான |
| மண் எல்லாம் | பூமிமுழுவதையும் | தோள் | புஜங்களை |
| இடந்து | பிளந்து [றி) | நெய் அணைந்த | கூர்மையையுடைய |
| எடுத்து | தூக்கிக்கொண்டு (எ கூடு | திகிரியினால் | திருவாழியாலே |

| | | | |
|---|---|---|---|
| நேர்த்தவன் | துணித்தஎம்பெருமானுடைய | குமுதமலர் | சிவந்த ஆம்பல்மலரை |
| தாள் | திருவடிகளை [ளே! | தம்வாயென்றும் | தங்கள்வாயாகவும் எண்ணி |
| அணைகிற்பீர் | சேரவிரும்புமவர்க | செய் | வயல்களில் |
| கடைசிமார்கள் | பள்ளஸ்த்ரீகள் | அணைந்து | (களைபறிக்க) இழிந்து |
| நெய்தலோடு | நெய்தல்மலரையும் | களைகளையாது | களைபறியாமல் |
| மைஅணைந்த | கருமைமிகுந்த | ஏறும் | வெறுமனேகரையேறுகின்ற |
| குவளைகள் | குவளைமலரையும் [ம் | காழிச்சீராமவிண்ணகரே சேர்மின் நீரே. | (௩ |
| தம்கண்களென்றும் | தங்கள் கண்களாகவு | | |

வ்யா.—மூன்றும்பாட்டு. (வையித்யாதி). கூர்மை மிக்கிருந்துள்ள முனையையுடைய கொம்பையுடைத்தான அத்விதீய மஹாவராஹமாய், பூமிப்பரப்படைய இடந்தெடுத்துக்கொண்டேறி. ஈச்வரத்வத்தால்வந்த செருக்காலே மதகார்யமான வ்யாபாரங்களைப் பண்ணி. (நெய்) கூர்மை. †கூர்மையுடையதிருவாழி. கடைந்துநெய்யிட்டிருந்துள்ள திருவாழியாலே, தேவதாந்தரபஜநத்தைப்பண்ணி அத்தாலே தனக்கு மிடுக்காக நினைத்திருக்கிற வாணனுடைய திண்ணிய தோள்களைநேர்த்தவன் திருவடிகளைக் கிட்டவேண்டியிருப்பீர்!

நெய்தற்பூவோடேகூட கறுப்பு மிக்கிருந்துள்ள குவளைகளைத் தம்கண்களென்றும், மலரையுடைத்தான †அரக்காம்பலைத் தங்களுடையவாயென்றும், †கடைசிமார் களைப்பறிப்பதாக அடுத்து வயலிலேயிழிந்து, கண்ணுக்கும் வாய்க்குமவற்றோடுண்டான ஸர்வஸாம்யத்தாலே களைபறியாதே போந்தேறுகிற காழியில். ... (௩)

---

அரு.—மூன்றாம்பாட்டு. (வையணைந்தவித்யாதி). நீங்கள் ப்ரளயாபந்ந ரக்ஷகனை வவன்படி யறிந்தாச்ரயிக்காவிடில் வாணன்பட்டது படுவீர்களென்கிறாரென்று ஸங்கதி.

"நெய்" என்றதினர்த்தத்தைத் தந்த்ரேண வருளிச்செய்கிறார் (கூர்மையித்யாதி). "நேர்த்த" என்றது - துணித்தவென்றபடி.

(அரக்காம்பல்) சிவந்த ஆம்பல். (கடைசிமார்) கடையான ஜந்மத்தையுடைய பள்ளச்சிகள். ... ... ... ... (௩)

மூ.—பஞ்சிய மெல்லடிப் பின்னைதிறத்து முன்னாள்
பாய் விடைகளேழடர்த்துப் பொன்னன்பைம்பூண்
நெஞ்சிடந்து குருதியுக வுகிர்வேலாண்ட
நின்மலன் தாளணைகிற்பீர் நீலமாலைத்

தஞ்சுடையா விருள் தழைப்பத் தரளமாங்கே
தண் மதியின் நிலாக் காட்டப் பவளந்தன்னால்
செஞ்சுடர் வெயில் விரிக்கு மழகார் காழிச்
சீராமவிண்ணகரே சேர்மினீரே. ... ... ...(௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஞ்சிய | செம்பஞ்சுபோலே | மாலை | அந்திப்பொழுதை |
| மல் அடி. | ம்ருதுவானதிருவடிகளையுடைய | தஞ்சுஉடைய | தனக்குத்தஞ்சமாகவுடைய |
| ன்னைதிறத்து | நப்பின்னைப்பிராட்டிக்காக | இருள் | இருட்டை |
| ண்நாள் | முற்காலத்தில் [கிற | தழைப்ப | அதிசயிப்பிக்கவும் |
| ாய் | கண்டார்மேலே விழு | ஆங்கு | அவற்றின்நடுவேயழுத்தின |
| ழ்விடைகள் | எழுருஷபங்களையும் | தரளம் | முத்துக்கள் |
| டர்த்து | அழித்து | தண் | குளிர்ந்த |
| பான்னன் | ஹிரண்யனது | மதியின் | சந்த்ரனது |
| பம்பூண் | அழகியஆபரணங்கள் | நிலா | நிலவை |
| நெஞ்சு | மார்பை [நிறைந்த | காட்ட | காட்டவும் |
| டந்து | பிளந்து | பவளம் | பவழங்கள் |
| ருதி | ரக்தம் | தன்னால் | இடையிடையேதாங்களழுத்தப்பட்டிருப்பதனால் |
| க | பீறிப்புறப்படும்படி | | |
| கிர்வேல் | நகங்களாகிறவேலை | செஞ்சுடர் | ஸூர்யனது |
| ண்ட | கார்யங்கொண்ட | வெயில் | காந்தியை |
| ன் மலன் | பரிசுத்தனானஎம்பெருமானது | விரிக்கும் | பரப்பவும் |
| ாள் | திருவடிகளை [களே! | அழகுஆர் | (இவற்றால்வந்த)அழகையுடைய |
| ணைகிற்பீர் | அணையவிரும்புமவர் | காழிச் சீராமவிண்ணகரே சேர்மின் நீரே. | (௪) |
| லம் | (மாடங்களிற்பதித்த) நீலரத்நங்கள் | | |

வ்யா.—நாலாம்பாட்டு. (பஞ்சியவித்யாதி) செம்பஞ்சுபோலே ருதுவான திருவடிகளையுடைய நப்பின்னைப்பிராட்டிக்காகப், பண்டாருநாள், கண்டார் மேலேவிழுகிற ருஷபங்களேழையுமழியச்செது; ஹிரண்யனுடைய ஆபரணங்களாலே அலங்க்ருதமானநெஞ்சை அநாயாஸேந கிழித்துப்பொகட்டு; ரக்தமானது கொழித்துப் றப்படும்படியாக, ஆளிட்டுச்செய்தல் ஆயுதத்தாலேயழியச்செய்ல் செய்கையன்றிக்கே, ஆஶ்ரிதவிரோதியைத்தானே கைதொட்டுத் ிருவுகிராகிற வேலாலே யழியச்செய்து அத்தால்வந்த சுத்தியையுடையவன் திருவடிகளைக் கிட்டவேண்டியிருப்பீர்!

(நீலமித்யாதி) அவ்வூரில் மாடங்களிலழுத்தின நீலரத்நம், மாலையைத் தனக்குத் தஞ்சமாகவுடைய, அதாவது - ராத்ரியைத்

†தனக்கு அபாஶ்ரயமாகவுடைத்தாயிருக்கிற இருளைத்தழைப்ப, நடுவேயழுத்தின முத்தானது, குளிர்ந்த சந்த்ரனுடைய நிலாவைக் காட்ட, இடையிடையேயழுத்தின பவளமானது, புகரையுடைய ஆதித்யனுடைய ப்ரகாசத்தைக்காட்டாநின்றது. †ஆக, ஏககாலத்திலே இருளும் சந்த்ரோதயமும் வெயிலுமொக்கக்கண்டநுபவிக்கும்படியான தேசமாயிற்று. ... ... ... (ச)

---

அரு.—நாலாம்பாட்டு. (பஞ்சியவித்யாதி) வாணனைப்போலே கைகழிகை மாத்ரமன்றிக்கே ஹிரண்யன் பட்டது படுவீர்கள் அவனையாஶ்ரயியாவிடில், ஆஶ்ரயித்தால் நப்பின்னையிடத்தில் போலே வ்யாமுக்தனுவனென்கிறாரென்று ஸங்கதி.

"தனக்குத் தஞ்சமாக வுடையராத்ரியை" என்றதுக்கு விவரணம் (தனக்கபாஶ்ரயமித்யாதி). "அழகார்" என்றதின் தாத்பர்யமருளிச் செய்கிறார் (ஆகவித்யாதி). ... ... ... ... ... (ச)

மூ.—தெவ்வாய மறமன்னர் குருதிகொண்டு
திருக்குலத்தி லிறந்தோர்க்குத்திருத்திசெய்து
வெவ்வாய மாகீண்டு வேழமட்ட
விண்ணவர்கோன் தாளணைவீர் விகிர்தமாதர்
அவ்வாயவாள்நெடுங்கண் குவளைகாட்ட
அரவிந்தம் முகங்காட்ட வருகே யாம்பல்
செவ்வாயின் திரள் காட்டும் வயல்சூழ் காழிச்
சீராமவிண்ணகரே சேர்மினீரே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தெவ் ஆய | சத்ருக்களாகிய | அட்ட | முடித்த |
| மறம் மன்னர் | வீரமுள்ளராஜாக்களுடைய | விண்ணவர்கோன் | அமரர்களதிபதியினது |
| குருதிகொண்டு | ரக்தத்தாலே | தாள் | திருவடித்தாமரைகளை |
| திருக்குலத்தில் | தன்வம்சத்தில் | அணைவீர் | சேரவிரும்புமவர்களே! |
| இறந்தோர்க்கு | முடிந்தவர்களுக்கு | விகிர்தம் | வேறுபாடுள்ள |
| திருத்திசெய்து | (உதகக்ரியையால்) த்ருப்திசெய்வித்து, | மாதர் | ஸ்த்ரீகளுடைய |
| வெம் | க்ரூரமான | அவ்வாய | அப்படிப்பட்ட |
| வாய | வாயையுடைய | வாள் | ஒளிபொருந்திய |
| மா | குதிரையுருவாய்வந்த கேசியென்பவனை | நெடு | (காதளவும்) நீண்ட |
| கீண்டு | கிழித்து | கண் | கண்களை |
| வேழம் | குவலயாபீடம்என்னும்யானையை | குவளை | நீலோத்பலமலர்கள் |

| | | | |
|---|---|---|---|
| ...ட்ட | காட்டவும் | செவ்வாயின் | சிவந்தவாயின் |
| ...ரவிந்தம் | தாமரைமலர்கள் | திரள் | கூட்டங்களை |
| ...கம் | முகத்தொளியை | காட்டும் | தோற்றுவிக்கிற |
| ...ட்ட | காட்டவும் | வயல்சூழ் | கழனிசூழ்ந்த |
| ...ருகே | ஸமீபத்திலுள்ள | காழிச்சீராமவிண்ணகரே சேர்மின் | |
| ...ம்பல் | செவ்வல்லிமலர்கள் | நீரே. (௬) | |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (தெவ்வாயவித்யாதி) சத்ருக்களாய் ...றத்தையுடையராயிருக்கிற ராஜாக்களையழியச்செய்து, அவர்க...நடைய ருதிரவெள்ளத்தைக்கொண்டு, வம்சத்திலே முடிந்துபோ...ர்க்கு †உதகக்ரியைகளைப்பண்ணி. இவ்வளவாலே - ஸ்ரீபரசுராமா...வானை நினைக்கிறது. வெவ்விதான வாயையுடைத்தாய்க்கொண்டு ...யாவஹமாம்படிதோற்றின ஆஸ்ரிதவிரோதியான கேசிவாயை ...நாயாஸேந கிழித்து, குவலயாபீடத்தை†முடித்து, ✻அயர்வறும்ம...ர்களதிபதியாயிருந்தவைத்து, இப்படி ஆஸ்ரிதவிரோதிகளைக் கை...தாட்டுப்போக்குமவன் திருவடிகளைக் கிட்டவேண்டியிருப்பீர்.

(விகிர்தமாதர்)†விஸஜாதீயஸ்வபாவைகளாயிருந்துள்ள ஸ்த்ரீக...நடைய அப்படிப்பட்ட ஒளியையுடைத்தான பரந்த கண்களைக் ...வளைகளானவை காட்ட, தாமரைப்பூவானது முகத்தில் தேஜஸ் ...ஸக்காட்ட, அருகே அலர்ந்துநின்ற அரக்காம்பலானது சிவந்த ...தரத்தினுடைய திரளைக்காட்டுகிற. ... ... ... (௫)

அரு.—அஞ்சாம்பாட்டு. (தெவ்வாயவித்யாதி) ஹிரண்யனைப்போலே ...ன் பட்டுப்போன வளவன்றிக்கே, (க) "மூவெழுகால் கொன்ற" என்கிற ...டியே ப்ரதிகூலரைக்குலமாக அழிக்குமவன் கிடீர், அவன் விஷயத்திலநு...வித்து ஜீவித்துப்போங்கோ ளென்கிறுரென்று ஸங்கதி.

திருத்தி - த்ருப்தியென்று விவக்ஷித்தருளிச் செய்கிறுர் (உதகேத்யாதி). ...டிட்ட" என்றதினர்த்தம் (முடித்து) என்கிறது.

விகிர்தம் என்றது - விலக்ஷண விகாரமுடைய என்றுய், பலிதமருளிச் ...செய்கிறுர் (விஸஜாதீயேத்யாதி). ... ... ... ... (௫)

.—பைங்கண் விறல் செம்முகத்து வாலி மாளப்
படர்வனத்துக் கவந்தனொடும் படையார் திண்கை
வெங்கண்விறல் விராதனுக விற்குனித்த
விண்ணவர்கோன் தாளணிவீர் வெற்புப் போலும்

(க) ரு - ௩ - க.

